4 பக்கங்கள் 15 காசுகள்

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

பதிவு எண்: எம். 8798.

கதிர் 10] மதுரை 31 - 10 - 72 செவ்வாய் [மலர் 256

## சைகோனை நோக்கி விடுதலைப்படை முன்னேற்றம்

சைகோன் அக் 30—

வியட்நாம் சமாதான உடன்பாட்டை ஏற்க அமெரிக்கா சண்டித்தனம் பண்ணுவதால். வியட்நாம விடுதலைப் படையினர் தங்களது விடுதலைப் போரை தீவிரமாக்க முனைந்துள்ளனர்.

தென்வியட்நாம் தலைநகரான சைகோன் அருகே உள்ள 12 கிராமங்களை விடுதலைப்படையினர் எதிரிகளிடமிருந்து கைப்பற்றினர். சைகோனைச் சுற்றியுள்ள எல்லா கிராமங்களையும் விடுதலை செய்ய அவர்கள் தீவிரமாக முனைந்துள்ளனர்.

## ஆந்திர கி.உ.க்கள் வெற்றி

ஐதராபாத் அக் 28—

ஆந்திரத்தின் 8 கரையோர மாவட்டங்களைச் சேர்ந்த 30 ஆயிரம் கிராம உத்தியோகஸ்தர்கள் 22 நாள் வேலை நிறுத்தம் செய்தனர்.

கடைசியில் கிராக்கிப்படி உயர்வு தர அரசு இணங்கியதின் பேரில் போராட்டம் நின்றது.

# மார்க்சிஸ்ட் கட்சி அலுவலக திறப்புவிழா

## கைவிட்டுப் போன கட்டிடம் மீண்டும் வந்ததில் கரைகடந்த உற்சாகம்

**மதுரை, அக். 28-**

**ஒன்ருயிருந்த கம்யூனிஸ்ட் கட்சியினுல் கட்டப்பட்டு திருத்தல்வாதிகளின் கைக்குப் போய் இப்போது உரியவர்களுக்கே சொந்தமாகியிருக்கும் கட்டிடத்தில், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சியின் தமிழ்மாநில அலுவலகத் திறப்பு விழா இங்கு இன்று நடைபெற்றது.**

இந்தக் கட்டிடம் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக்கே மீண்டும் வந்திருப்பதில் கட்சி உறுப்பினர்களுக்கும் ஆதரவாளர்களுக்கும் ஏற்பட்டுள்ள மகிழ்ச்சியைப் பிரதிபலிப்பும் வகையில் அளவு கடந்த உற்சாகத்துடன் அவர்கள் விழாவில் கலந்து கொண்டனர்.

விழாவின் முதல் நிகழ்ச்சியாக செங்கொடியை தோழர் எம். ஆர். வெங்கட்ராமன் ஏற்றுவித்தார்.

விழாவுக்குக் கட்சியின் தமிழ் மாநிலச் செயலாளர் தோழர் ஏ. பாலசுப்ரமண்யம் தலைமை வகித்தார். அவர் தம்முடைய தலைமையுரையில் கீழ்வருமாறுகுறிப்பிட்டார்.

நாட்டில் எவ்வளவோ அதிசயங்கள்நடக்கின்றன. நம் கையைவிட்டுப் போனதாகக் கருதப்பட்ட இந்தக் கட்டிடமும் நம்மிடம் மீண்டும் வந்திருக்கிறது.

ஒன்ருயிருந்த காலத்தில் இந்தக் கட்டிடத்தைக் கட்டி இங்கு தனி அச்சகம அமைக்க பிரதானமாக இருந்தவர்கள் நாம்.

இதற்காக ரூ 2 லட்சம் வசூலிக்கப்பட்டதில் ரூ. 85 ஆயிரம் மதுரை மாவட்டத்திலிருந்தே வசூலிக்கப்பட்டது.

இது இங்கு கட்டப்படுவதற்கு எதிர்ப்பாக இருந்த தலைவர்கள்தான் வலது கம்யூனிஸ்ட் கட்சியில் இருக்கிருர்கள்.

இங்கிருந்து பத்திரிகை வெளியிடுவதையே அதிதீவிரவாதம் என்று மாகாண கவுன்சில் கூட்டத்தில் பேசினுர்கள்.

இந்தக் கட்டிடமும் கட்டி இதில் பி. ஆர். அவர்கள் ரூ. 1¼ லட்சத்துக்கு கிழக்கு ஜெர்மனியிலிருந்து வாங்கிய ரோட்டரி அச்சு இயந்திரத்தையும் அமைத்தபின் கட்சி இரண்டாகப் பிரிந்து சொத்து அவர்களிடம தங்கிவிட்டது.

அதற்குப்பின், அவர்கள் எந்த நோக்கத்துக்காக இந்தக் கட்டிடம் கட்டப்பட்டதோ அந்த நோக்கத்தை நிறைவேற்றவேண்டும் என்று நினைக்கவில்லை.

அச்சு யந்திரத்தை ரூ. 4.5 லட்சத்திற்கு விற்று லாபம் அடித்தார்கள்.

### தாராளம் காட்டுவீர்

கட்டிடத்தைக்கூட பராமரிக்க வேண்டும் என்று கருதாமல் பாழாக விட்டிருக்கிருர்கள். கடைசியில் இதை நம்மிடமே விற்கும் நிலை அவர்களுக்கு ஏற்பட்டது.

இந்தக் கட்டிடம் வாங்கியதில்நமக்கெல்லாமமகிழ்ச்சி கடன் எழுப்பி இந்தக் கட்டிடம் வாங்கப்பட்டிருக்கிறதென்ருல் உங்கள் மீதுள்ள நம்பிக்கையால்தான். எனவே நீங்களெல்லாம் நன்கொடைகளைத் தாராளமாக வழங்க வேண்டும என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

### ராமமூர்த்தி பேச்சு

இந்தக் கட்டிடத்தைக் கட்டி இதை வலது கம்யூனிஸ்ட் கட்சி சுவீகரித்துக்கொள்ளும்படி விட்டதற்கு நாங்கள் பொறுப்பு என்பதை ஒப்புக்கொள்ளுகிருேம்.

பங்குத்தொகையை அவர்கள் பெயருக்கு மாற்றிக் கொடுத்ததால் இது அவர்களுக்கே போய் விட்டது.

பின்னர் இதை சிண்டிகேட்காங்கிரசுக்கு ரூ. 1 லட்சத்து 101 க்கு விற்று ரூ 5000 அட்வான்சையும் வாங்கினுர்கள். ஆனுல் தேர்தலில் தோற்றதால் இந்தக கட்டிடத்தை வாங்காமல்சிண்டிகேட்காரர்கள் விட்டுவிட்டார்கள்.

பின் இந்தக் கட்டிடத்தை யாரும் வாங்கவில்லை. இது பேய்பிடித்த கட்டிடம் என்று பெயராகி விட்டது. கடைசியில் பேயை ஓட்டக்கூடியவர்கள் நாம் தான் என்று நமக்கு விற்று விட்டார்கள்.

நம்முன்னுள்ள கடமை பெரிது. காங்கிரசின் "கரீபி ஹட்டோ" கோஷம் இப்போது எடுபடவில்லை. மக்கள் அனுபவத்தின் மூலம் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஒன்றுதான் மக்களுக்கு பணியாற்றும் கட்சி என்பதை புரிந்துகொண்டு வருகிருர்கள். மக்களுக்குநம்முடைய பிரச்சாரத்தைக் கொண்டுசெல்லும் நம்முடைய பத்திரிகையைப் பரப்ப வேண்டும்.

இந்தக்கட்டிடத்தை வாங்குவதற்கான கடனை அடைக்கவும், பத்திரிகையை அபிவிருத்தி செய்வதற்கான செலவை ஈடுகட்டவும் நன்கொடை திரட்டினுல்தான் இன்று நாம் அடைந்திருக்கும் மகிழ்ச்சியில் பொருள் இருக்க முடியும். அதற்கு நீங்கள் தாராளமாக வாரி வழங்குவீர்கள் என்ற நம்பிக்கை எனக்குண்டு.

### எம். ஆர். வி பேச்சு

கட்சி வரலாற்றில் இன்று ஒரு முக்கியமான நாள். நாம் மகிழ்ச்சியடைவது இயற்கையே. இழந்த பொருள் நமக்குத் திரும்ப வந்துள்ளது.

மக்களுக்கு பணியாற்றவே இந்தக் கட்டிடத்தைக் கட்டினேம். இதை இங்கு எழுப்பும் வேலையில் நெருங்கிய சம்பந்தம் உடையவன் என்ற முறையில் எவ்வளவு உறுதியோடு 10-ஆண்டுகளுக்கு முன் நாம் செயல்பட்டோம் என்பதை நான் அறிவேன்.

ஆயிரக்கணக்கான பிரதிகள் அடித்து பத்திரிகை விற்க வேண்டும் என்று நாம்செயல்பட்டோம். கட்சி பிரிந்து இந்தக் கட்டிடம் நம் கையை விட்டுப் போயிற்று.

இப்போது 10 ஆண்டுகளுக்குப்பின் நம்மிடம் இது வந்திருக்கிறது. நம்முன் பெரிய கடமை சந்திக்கிறது. நம்முடைய பத்திரிகையை பரப்பி மக்களுக்கு நம் பிரசாரத்தைக் கொண்டுசெல்லவேண்டும்

### நமது தலையாய கடமை

தேர்தல் சமயத்தில் எப்படி வீடு வீடாகச் சென்றுசெயல்பட்டோமோ அதேமாதிரி செயல்பட்டு இதற்குத் தேவையான நிதி திரட்டவேண்டும் 10 வருடங்களுக்கு முன் தொடங்கிய அந்தவேலையை நாம் இப்போது செய்து

(4-ம் பக்கம் பார்க்க)

## அன்னியக்கொள்ளை ஆண்டு தோறும் வட்டி

நம்நாட்டு உழைக்கும் மக்கள் உதிரம் சிந்தி பாடுபட்டு சம்பாதித்த அன்னியச் செலாவணி எப்படி விரயம் ஆகிறது என்பதைப் பாருங்கள்.

ஒவ்வொரு ஆண்டும் அன்னிய நாடுகளிடம் வாங்கிய கடனுக்காகவும், வட்டிக்காகவும் நம் நாடு பல கோடிக்கணக்கான ரூபாய்களை அளளிக் கொடுத்துக்கொண்டிருக்கிறது.

ஒவ்வொரு திட்டம் முடிந்த பின்னும் நாடு வளர்ச்சியடைந்து, அன்னிய நாட்டிற்கு கொடுக்கும் கடனுக்கான வட்டி குறைவதற்குப் பதிலாக அதிகரித்துக்கொண்டே போயுள்ளது. இதன் விவரம் வருமாறு:—

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் முடிவில் அன்னிய நாடுகளுக்கு கடனுக்காகவும் வட்டியாகவும் செலுத்திய தொகை ரூ. 23 கோடியே 60 லட்சம.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம்
ரூ. 119 கோடியே 40 லட்சம்
மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டம்
542 கோடியே 60 லட்சம்

நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தின்போது :—

1966-ம் ஆண்டில்
ரூ. 247 கோடியே 50 லட்சம்
1967-ம் ஆண்டில் ரூ. 330 கோடி
1968-ம் ஆண்டில் ரூ. 375 கோடி
1969-ம் ஆண்டில் ரூ. 419 கோடியே 50 லட்சம்
1970-ம் ஆண்டில் ரூ. 450 கோடி
1971-ம் ஆண்டில் ரூ. 457 கோடியே 10 லட்சம்
1972-ம் ஆண்டு முடிவிற்குள் ரூ. 503 கோடியே 60 லட்சம் இருக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

# அண்ணு தி. மு. க. வின் கொள்கை என்ன?

## தோழர் பி. ராமமூர்த்தி கேள்வி

**மதுரை, அக் 28—**

**தி. மு. க. கடைப் பிடித்துவரும் கொள்கைகளிலிருந்தும் நடைமுறைகளிலிருந்தும் தி. மு. க. வில் ஏற்பட்டுள்ள பிளவு தவிர்க்க முடியாதது என்று தோழர் பி. இராமமூர்த்தி இங்கு தி. மு. க. பிளவுபற்றி செய்தியாளர்கள் கேட்ட கேள்விகளுக்கு பதிலளிக்கையில் குறிப்பிட்டார்.**

**தி. மு. க. விலிருந்து பிரிந்துள்ள புதிய கட்சிக்கு தற்போது எந்தக் கொள்கையும் இருப்பதாக தெரியவில்லை.**

**தமிழ்நாட்டின் ஜனநாயக இயக்கத்திற்கு இப் புதிய கட்சி உதவிகரமாக இருக்க வேண்டுமானுல் தனது கொள்கையையும் திட்டத்தையும் தெளிவாக அறிவிக்க வேண்டும் என்று அறிவுறுத்தினர். அக். 28ந்தேதி இங்கு நடந்த செய்தியாளர் கூட்டத்தில் தோழர் பி. ராமமூர்த்தி வெளியிட்ட அறிக்கை வருமாறு:—**

தி. மு. க. அரசாங்கம் இதுவரை கடைப் பிடித்து வந்த கொள்கைகளாலும், நடைமுறைகளாலும் ஏற்பட்ட தவிர்க்க முடியாத விளைவு தான் தி மு. க. பிளவு.

### மாற்றுக் கொள்கை கிடையாது

சில கோரிக்கைகளுக்காக மத்திய அரசை எதிர்த்துப் போராடுவது போல் அடிக்கடி பாவனை செய்துகொண்டபோதும் — உண்மையில் மக்கள்முன் வைக்க, காங்கிரசின்கொள்கைகளுக்கு மாருன ஒரு கொள்கை தி. மு. க. விற்கு இல்லை.



சுரண்டப்படும்மக்களுக்கு ஆதரவாக ஒரு தெளிவான கொள்கையோ, இலட்சியமோ இல்லாமலிருப்பதால் காங்கிரஸ் கட்சி ஆளும் எல்லா மாநிலங்களிலும் லஞ்சம் ஊழல் பெருகியிருப்பதைப்போல், இங்கும் லஞ்ச ஊழல் வளரத்தான் செய்யும்.

எங்கும் பரவலாக லஞ்ச ஊழல் தலைவிரித்தாடுகிறது என்பது தி. மு. க. வின் முன்னணி உறுப்பினர்களில் ஒருவரான திரு. ஏ. வி. பி. ஆசைத்தம்பியின் பேச்சிலிருந்து தெளிவாகிறது. திரு. ஆசைத்தம்பி லஞ்சம் வாங்குவதில் தவறேதும் காணவில்லை, மாருக அதை நியாயப்படுத்த முயலுகிருர்.

### லஞ்ச ஊழல்

1971-ம் ஆண்டு பொதுத் தேர்தல் நடந்து ஒன்றரை ஆண்டு காலம முடியுமுன்னர், இதே காரணத்திற்காக ஒவ்வொரு மாநிலத்திலுள்ள காங்கிரஸ் கட்சியிலும் பிளவுகளும்-கோஷ்டிச்சண்டைகளும் உருவாகியுள்ளன.

காங்கிரஸ் கட்சி உறுப்பினர்களாலேயே வெளிப்படையாக லஞ்சஊழல் குற்றச்சாட்டுகள் சாட்டப்படுகின்றன.

ஆனுல் தமிழ் நாட்டிலுள்ள ஒரே வித்தியாசம் என்னவெனில் இங்கு தி. மு. க பிளவுபட்டுள்ளது. தி. மு. க. விலிருந்து திரு. எம். ஜி. ராமச்சந்திரன் வெளிவந்து, ஒரு புதியகட்சியை ஆரம்பித்துள்ளார் என்பதே.

### அ. தி. மு. க. கொள்கை என்ன?

தற்போது இப் புதிய கட்சிக்கென்று குறிப்பிட்ட ஒரு திட்டமோ, கொள்கையோ கிடையாது. தற்போது அது சொல்வதெல்லாம் லஞ்ச ஊழலை எதிர்த்துப்போராடுவோம்.தி.மு.க. வின் நிறுவனரான காலம் சென்ற திரு. அண்ணுதுரையின் கொள்கைகளுக்காக நிற்போம்என்பதே. கடமை. கண்ணியம்,கட்டுப்பாடு என்ற, அண்ணு வரும் அறிந்த மூன்று கொள்கைகள் பற்றி எற்கனவே எவ்வளவோ கதைகள் சொல்லப்பட்டபோதிலும் அது ஒரு கொள்கையுமாகாது அல்லது ஒரு திட்டமுமாகாது.

தமிழகத்தில் ஜனநாயக இயக்கத்தைக் காட்டுவதற்கு இப்புதிய கட்சி விரும்பினல், அது உழைக்கும் மக்களுக்கு ஆதரவாகவும், பெரு முதலாளிகளுக்கு எதிரானதாகவும் உள்ள ஒரு, திட்டவட்டமான கொள்கை திட்டத்தின் அடிப்படையில் பாடுபட முன்வரவேண்டும். இரு காங்கிரஸ் கட்சிகள், சுதந்திரா போன்ற கட்சிகளின் மக்கள் விரோத கொள்கைகளுக்கு எதிராக, ஒரு சமரசமில்லாத ஒரு எதிர்க்கட்சியாக தன்னை உருவாக்கிக் கொள்ள வேண்டும். சுரண்டப்பட்ட மக்களின் பிரச்சனைகளை எடுத்துக்கொண்டு அவர்களின் முன்னேற்றத்திற்காக போராட வேண்டும். இல்லையேல் பெரிய பெரிய வாக்குறுதிகளுடன் துவக்கப்பட்ட தி. மு. க. வைப்போல் தான் இந்தக் கட்சியும் ஆகிவிடும்.

தற்போது மக்கள் மத்தியில் ஏற்பட்டுள்ள கோபமும், கொந்தளிப்பும் லஞ்ச ஊழலை ஓரளவாவது குறைக்க உதவுமானுல், குறைந்த பட்சம் ஒரு நல்ல காரியத்திற்கு இது பயன்படும்.

## மதுரை மோட்டார் தொழிலாளர் உண்ணுவிரதம் தொடர்கிறது

மதுரை, அக். 29—

இங்கு ஆரப்பாளையத்தில் உள்ள சுவர்ணு அன கம்பெனி ஒர்க்ஷாப தொழிலாளர்கள் தோழர்கள் டி. விஜயராமன், கே. இலக்குமணன் ஆகிய இருவா கடந்த 25-ந் தேதி முதல் தொடர்ந்து உணணுவிரதம் இருந்துவருகிருர்கள். நிர்வாகத்தின் பழிவாங்கும் போக்கைக் கண்டித்தும். வேலை நீக்கம் செய்யப்பட்ட தொழிலாளர்களை மீண்டும் வேலைக்கு எடுக்கக்கோரியும் 2 மாத போனஸ் கோரியும், மற்றும்பல கோரிக்கைகளுக்காகவும் உண்ணுவிரதம் இருந்து வருகிருர்கள்.

பல்வேறு தொழில்களைச் சேர்ந்த தொழிலாளர்கள் மார்க்சிஸ்ட் கமயூனிஸ்ட் கட்சித் தோழர்கள, மாதர் சங்கத்தினரும, மாணவர்களும் உண்ணுவிரதம் இருக்கும் தோழர்களைச் சந்தித்து ஆதரவு தெரிவித்னர். ஆர்ப்பாட்டம் செய்து ஆதரவு முழக்கம் எழுப்பினர்.

## நவ. 5-க்குள் நடவடிக்கை இல்லையெனில் போராட்டம்

### எம். ஜி. ஆர். அறிவிப்பு

சென்னை, அக். 30—

தமிழ் நாட்டில் வன்முறைகளுக்கு முற்றுப்புள்ளி வைக்க நவமபர் 5-ம தேதிவரை தாம் கெடு கொடுப்பதாகவும், அதற்குள் நடவடிக்கை எடுக்கப்படவில்லையெனில், தமிழகம முழுதும போராட்டம் நடத்தப் போவதாகவும நேற்று இங்கு நடைபெற்ற பொதுக் கூட்டததில் எம. ஜி. ராமச்சந்திரன் அறிவித்தார்.

முதல் கட்டமாக மக்களைத திரட்டி கவர்னரைச் சந்திக்கப் போவதாகவும் அடுத்த கட்டப் போராட்டம பின்னர் அறிவிக்கப்படும என்றும் அவர் தெரிவித்தார். மேலும் எம். ஜி. ஆர். பேசுகையில்,தாம் ஏற்படுத்திய அரசு, மத்திய அரசினுல் தூக்கி எறியப்படக்கூடாது என்பதற்காக தாம் இதுவரை பொறுமையாக இருந்ததாகவும், பொறுமைக்கும் ஓர் எல்லையுண்டு என்றும கூறினுர்.

தமிழ் நாட்டில் நடந்து வரும வன்முறைகளைக் கண்டு பிரதம மந்திரி இதுவரை எவ்வித நடவடிக்கையும மேற்கொள்ளாதது ஏன் என்று கேட்ட எம்.ஜி. ஆர்., "தமிழ் நாட்டைத் தனியாகப் பிரித்து விட்டடும. நாங்கள் பார்த்துக்கொள்கிருேம்" என்ருர். தமிழ்நாட்டில் அமைதிக்காக பிரதமா உடனடியாக நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும என்ருர்.

லஞ்சப்புகார், ஊழல்கள் ஆகியவை குறித்து தாம சாட்டும குற்றச் சாட்டின அடிப்படையில் தி. மு. க. அமைச்சரவை ராஜினுமா செய்யத் தயாரா என்று கேட்ட எம். ஜி. ஆர், இவ்வாறு மறு தேர்தலுக்கு நிற்பதுதான் சிறந்த ஜனநாயகம் என்ருர்.

## அமெரிக்காவுக்கு "பிராவ்தா" வேண்டுகோள்

மாஸ்கோ, அக். 30—

"சைகோன் நிர்வாகத்தை" பயன்படுத்தி வியட்நாமில் சமாதானம் ஏற்படும வாய்ப்பை நழுவவிட வேண்டாம் என்று சோவியத் பத்திரிகையான "பிராவ்தா" அமெரிக்காவைக் கேட்டுக்கொண்டுள்ளது.

## அ.தி.மு.க.வுக்கு மேலும் ஒரு எம். எல். ஏ.

சென்னை, அம். 30——

சிவகாசி சட்டமன்றத் தொகுதி தி. மு. கழக எம். எல். ஏ. காளிமுத்து நேற்று தி. மு. கழகத்திலிருந்து விலகி, அண்ணு தி. மு. க. வில் சேர்ந்து கொண்டார்.

இதுவரை 7 எம்.எல்,ஏ.க்கள் அண்ணு தி. மு. க.வில் சேர்ந்துள்ளனர்.

## வலது கம்யூனிஸ்ட் கட்சியில் பிளவு?

மதுரை, அக். 30—

வலது கம்யூனிஸ்ட் கட்சியில கடும் பிளவு ஏற்பட்டிருப்பதாக இராமநாதபுரம மாவட்ட தி. மு. க. செயலாளர் திரு. எஸ். எஸ். தென்னரசு எம். எல். சி. கூறினுர்.

மதுரையில் நேற்று நடைபெற்றபொதுக் கூட்டம் ஒன்றில் அவர் இக்கருத்தை வெளியிட்டார்.

மூன்று வருடமாகவே வலது கம்யூனிஸ்ட் கட்சியில் புகைச்சல் இருப்பதாகவும் வெகுவிரைவில் அக்கட்சி இரண்டாக உடையப் போகிறது என்றும் நான்கு எம். எம். ஏ.க்கள் விலகப் போகிருர்கள என்றும் தென்னரசு அறிவித்தார்.

# தீக்கதிர்

## காங்கிரஸ் சோற்றுவித்த நெருக்கடி

"முல்கி" விதிகள் சட்டப்படி செல்லும் என்று அண்மையில் சுப்ரீம் கோர்ட் தீர்ப்பளித்துள்ளது. இந்தத் தீர்ப்பானது பிராந்திய வெறியைக் கட்டவிழ்த்து விடுவதற்கு காங்கிரஸ் ஆட்சியாளர்களுக்குப் பச்சை கொடி காட்டியுள்ளது.

இந்தத் தீர்ப்பு வெளியானதைத் தொடர்ந்து தெலிங்கானு பகுதியைச் சேர்ந்த காங்கிரஸ் தலைவர்கள் "முல்கி" விதிகளை முழுமையாக அமுலாக்க வேண்டும் என்று அறிக்கை மேல் அறிக்கை விட்டுக்கொண்டிருக்கின்றனர். இதற்காக ஒரு கிளர்ச்சியையே தொடங்கப் போவதாக இரண்டு முன்னாள் அமைச்சர்கள் உள்ளிட்டு 33 காங்கிரஸ் எம். எல். ஏக்கள் அச்சுறுத்தியுள்ளனர்.

இதற்கு மாருக ஆந்திரப் பகுதியைச் சேர்ந்த காங்கிரஸ் தலைவர்கள் சுப்ரீம் கோர்ட் தீர்ப்புக்கு எதிராக மக்களுடைய உணர்ச்சியைத் தூண்டிவிட்டு வருகின்றனர். அரசாங்க ஊழியர்களின் ஒரு பகுதியினர் முல்கி விதிகளை ரத்துசெய்யக்கோரி நவம்பர் 1-ல் "உரிமைப் பாதுகாப்பு தினம்" கொண்டாடப் போவதாக அறிவித்துள்ளனர்.

மீண்டும் ஆந்திரத்தை இரு மாநிலங்களாகக் கூறு போட வேண்டும் என்ற கோஷத்தைக் காங்கிரஸ் தலைவர்கள் எழுப்பியுள்ளனர். 1969-ல் ஏற்பட்டதுபோன்ற கொந்தளிப்புநிலைமை உருவாகும் அறிகுறிகள் தென்பட்டுள்ளன.

முல்கி விதிகள் என்று கூறப்படும் விதிகள் 1918-ம் வருடத்தில் நிஜாம்மன்னரால் பிறப்பிக்கப்பட்டவையாகும். இந்த விதிகள் ஐதராபாத் ராஜ்யத்தில் எல்லா உத்தியோகங்களையும் அந்த ராஜ்யத்தைச் சேர்ந்த பிரஜைகளுக்கு அல்லது அங்கு 15 ஆண்டுகளுக்கு மேலாக வசித்துக் கொண்டிருந்தவர்களுக்கு மட்டுமே ஒதுக்கி வைக்கவேண்டும் என்று கூறுகின்றன.

ஆந்திரபிரதேச மாநிலத்தின் தலைநகரான ஐதராபாத் தெலிங்கானு பகுதியில் இருப்பதால முல்கி விதிகளை அமுல்படுததும்போது ஐதராபாதத்திலும் செக்கந்திராபாத்திலும் வேலை செய்யும ஆந்திரப பகுதியைச் சேர்ந்த 10 ஆயிரம் அரசு ஊழியர்களை வேறு இடங்களுக்கு மாற்ற வேண்டியிருக்கும். இது ஐதாபாத்திலும் தெலிங்கானு பகுதியிலும உள்ள மாநில அரசு அலுவலகங்களில் ஆந்திரப்பகுதியைச் சேர்ந்த 3 கோடி தெலுங்குபேசும் மக்களுககும் நிரந்தரமாக வேலைவாய்ப்பை மறுப்பதுமாகும்.

பல ஆண்டுகளாக இந்தப் பிரச்னையில் காங்கிரஸ் ஆட்சியாளர்கள் உறுதியான நிலை எடுக்கத் தவறியது, காங்கிரஸ் கட்சியில பிராந்திய வெறியர்கள் சீர்குலைவுக கோஷங்களை எழுப்புவதற்கு வாய்ப்பளித்துள்ளது.

இப்பிரச்சனையில் ஆலோசனை பெறுவதற்கு ஆந்திர பிரதேச முதலமைச்சா டில்லிககுச் சென்ற போது ஆந்திரப பகுதி, தெலுங்கானுப் பகுதி ஆகிய இரு பகுதிகளையும் சோநத தலைவர்கள் ஒரு "சுமுகமான" தீர்வு காணுமாறு கேட்டுக்கொளளப்பட்டனர்.

இந்தப் பிரச்னைக்கு காங்கிரஸ் கட்சி தீர்வு காண முடியாது என்பதை அனுபவம் நன்கு உணர்த்தியுள்ளது.

1956-ல் ஆந்திரப்பிரதேச மாநிலம் உருவாக்கப்பட்டதிலிருந்தே பெரும்பாலும் நிலப்பிரபுக்களான காங்கிரஸ் தலைவர்கள் பதவிகளைப் பங்கு போட்டுக்கொள்வதில் அக்கறை காட்டினர்களேயொழிய தெலுங்கானு பகுதியின் பின்தங்கிய நிலைமையைப் போக்கவும் தெலுங்கானு மக்களின் உண்மையான பயத்தைப் போக்கவும அக்கறை காட்டவில்லை.

அதற்குப்பதில் தெலுங்கு பேசும் மக்களின் ஒற்றுமையை உடைப்பதற்கே இநதப் பயததை அவர்கள் பயன்படுததினர். பல ஆண்டுகளாக தெலுங்கு பேசும் மக்கள் போராடி உருவாககிய ஆந்திர பிரதேச மாநிலத்தை உடைக்கும அளவுககுச் சென்று தனித் தெலுங்கானு கிளர்ச்சியையும் அவர்கள் தூண்டிவிட்டனர்.

சீர்குலைவு சக்திகளுக்கு இவ்விதம் ஊக்கமளிக்கப்பட்டதின் நேரடி விளைவுகளை இன்று நாம் பார்க்கிறோம்.

விலைவாசி உயர்வையும், வறட்சியையும், பஞ்சத்தையும், வேலையினமையையும எதிர்தது பிரம்மாண்டமான மககள இயககங்கள் தோன்றியிருக்கும்போது குறுகிய பிராந்திய வெறியின் மீது மக்களின கவனம் திசை திருப்பிவிடப் படுகிறது.

பிற்போக்காளர்களிடமிருந்து நாம் வேறு எதை எதிர்பார்கக முடியும்? இவர்களுடைய சூழ்ச்சியை மககள் புரிநது கொள்ளச் செய்வதின மூலமே ஒரு மாநிலத்தைச் சேர்ந்த மக்கள் ஒருவரை யொருவரை எதிர்த்துநிற்கும் நிலைமை உருவாவதைத் தடுக்க முடியும்.

## 20 சதவீதம் போனஸ்
## ஆலங்குளம் சிமெண்ட் தொழிலாளர் கோரிக்கை

ஆலங்குளம், அக். 28—
ஆலங்குளம் தமிழ்நாடு சிமெண்டு அண்டு பாக்டரி ஒர்க்கர்ஸ் யூனியன் பேரவைக் கூட்டம் அக். 22ல் நடந்தது. அப்போது யூனியனுக்கு புதிய நிர்வாகிகள் தேர்நதெடுக்கப்பட்டனர்.

தமிழக சி. ஐ. டி. யூ. வின் துணைச்செயலாளர் தோழர் ஏ.நல்லசிவன் தலைவராகவும் தோழர்கள் ஜார்ஜ் சொக்கையா, பாலசுபபிரமணியன் ஆகியோர் துணைத் தலைவர்களாகவும, தோழர் பி. கிருஷ்ணசாமி செயலாளராகவும், தோழர்கள் கருப்பையா, இராமசாமிப் பாண்டியன் ஆகியோர் துணைச் செயலாளராகவும், தோழர் கந்தசாமி பொருளாளராகவும் எட்டுத் தோழாகள் நிர்வாகக் குழு உறுப்பினர்களாகவும தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

இறுதியில், பாக்டரியின் ஒவ்வொரு டிபார்டமெண்டிலும் உள்ள பிரச்னைகள் பற்றி விவாதிக்கபபட்டு தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன.

இது அரசுத்துறை பாக்டரியாயிருந்தும், தொழிலாளிகளை அச்சுறுத்துவதற்காக. தரப்படவேண்டிய நிரந்தரமாக்கும் உத்திரவைத தராமல் தைத்திருப்பதற்கு இக்கூட்டம் கண்டித்தது. நிரந்தரமாக்கும் உத்தரவுக்காக இயக்கம நடத்த முடிவு செய்தது.

பாக்டரி இலாபகரமாக இயங்குவதால், 20 சதவீதம் போனஸ் வழங்க வேண்டும் என்று நிர்வாகத்தை இக்கூட்டம் வலியுறுத்தியது.

# தினம் ஒரு கொலைபுரியும் ரௌடிக்கு திரிபுரா காங்கிரஸ் உதவி
## பட்டியல் கொடுத்தும் கைது இல்லை

அகர்தலா, அக். 28—
திரபுரா மாநிலத் தலைவரான அகர்திலாவில் பட்டப்பகலில் மாணவர் தலைவர் கிஷிர் கோபால் படுகொலை செய்யப்பட்டார்.

மகராஜா பிர்பிக்ராம் கல்லூரியில் பயிலும் தோழர் கோப்பால் இந்திய மாணவர் சங்கத்தின் தீவிர உறுப்பினருமாவார். அவர் பட்டப்பகல் 12 மணிக்கு கல்லூரி முதல்வரின் அலுவலகத்திற்கு முன்பு படுகொலை செய்யப்பட்டார். கொலை செய்த ரௌடிக்கும்பல்களும், இந்திரா காங்கிரஸ் மாணவர்களும். தப்பியோட அனுமதிக்கப்பட்டனர். இந்நிகழ்ச்சி மாணவர்களிடையே பெரும் கொந்தளிப்பை ஏற்படுத்தியது.

இந்தப் படுகொலையைக் கண்டித்து மறுநாளே அகர்தலா பகுதி முழுவதும் மாணவர்கள் வேலை நிறுத்தத்தில் குதித்தனர்.

### இந்திரா காங்கிரஸ் சதி

திரிபுராவில் காங்கிரசுக்கு எதிராக வளர்ந்து வரும் ஜனநாயக சக்திகளை ஒடுக்குவதற்கும், சீர்குலைப்பதற்கும் இந்திரா காங்கிரஸ் குண்டர்கள் பயங்கரமான கொலை வெறிச் செயல்களில் ஈடுபட்டுள்ளனர்.

பட்டப்பகலில் நடைபெற்ற இந்தப் படுகொலை அரசியல் சூழ்ச்சியே.

தோழர் கிஷிர் கோபால்டி இந்திய மாணவர் சங்கத்தின் தீவிர உறுப்பினர்.

### 'ஆனந்த மார்க்' நக்சலைட் கும்பல்

இவரை திட்டமிட்டு இக்கல்லூரியின் பழைய மாணவர்களும், திரிபுரா காங்கிரசைச் சேர்ந்த அனைவருக்கும் தெரிந்த படு கேவலமான ரௌடிகளும் படுகொலை செய்துள்ளனர்.

இந்த மாணவர்கள் முன்னர் 'ஆனந்த மார்க்' கும்பலிலும், நக்சலைட் கும்பலும் இருந்தவர்கள். சென்ற தேர்தலில் திரிபுரா முதல் அமைச்சர் சுகமோய் சென்குப்தாவை ஆதரித்து வேலை செய்தவர்கள்.

### கொலைக்கு அரசின் உதவி

இந்த அரசியல்படுகொலை போலீஸ், அரசின் உதவியுடன் திட்டமிடப்பட்டுநடந்தது என்பதை அனைவரும் அறிவார்கள்.

கொலைகாரர்கள், தோழர் கோபால்டியை படுகொலை செய்துவிட்டு மகாராஜா, பிர்பிகராம் கல்லூரி (எம் பி. பி.) விடுதியில் ஒளிந்து கொண்டனர். அவர்கள் கல்லூரியைவிட்டு வெளியில் சென்று பல வருடங்களான பின்பும கொலைகாரர்கள் மாணவர் விடுதியில் தங்க கல்லூரி நிர்வாகிகள் அனுமதித்திருந்தனர்.

போலீசாரின் கொலை நிகழ்ச்சியை நேரில் பார்த்த ஒருவர். கொலைகாரர்கள் எம. பி. பி. கல்லூரி விடுதியை நோக்கிச் சென்றதை தாம் பார்த்ததாக கூறினுர். தோழர் கிஷிர் கோபால்டியுடன் வந்த நண்பர் போலீசாரிடம், தன்னை கல்லூரி விடுதிக்கு அழைத்துச் சென்றுல் கொலைகாரர்களை அடையாளம் காட்டுவதாகக் கூறினுர். ஆனுல் போலீசார் அவரை கல்லூரி விடுதிக்கு கூட்டிச் செல்ல மறுத்துவிட்டனர்.

### வெறிக்கும்பல்

இதே குண்டர் கும்பல் தான் அகர்தலாவில் நடைபெற்ற பல கொலை வெறிச் செயலகளுக்கும், அரசியல் ரௌடித்தனததிற்கும் காரணமாக உள்ளது.

அன்மையில் இதே குண்டர் கும்பல்தான் 'ஜன சிக்சா' பத்திரிகை அலுவலகத்தையும், அச்சக ஊழியர் பிரேன் மித்ராவையும் தாக்கியது.

எம். பி. பி. கல்லூரியில் நடைபெற இருந்த கல்லூரி தேர்வுகளை நடைபெருமல் செய்வதற்கு கல்லூரி ஆசிரியர்களையும், மாணவர்களையும் தாககியுள்ளது!

### போலீசின் மறைமுக ஆதரவு

அகர்தாலாவில் சினிமா கொட்டகைமுன்பு2கல்லூரி மாணவர்களை கத்தியால் குத்தியதும் இதே கும்பல் தான். பின்னர் மருத்துமனையில் சேர்க்கப்பட்ட அந்த மாணவர்கள், தங்களைக் கத்தியால் குத்தியவர்கள் கல்லூரி விடுதியில் தங்கியிருந்த இந்த ரௌடிக் கும்பல்தான் என்று வாக்குமூலம் கொடுத்தும—போலீசார் இதுவரை இக் கொலைகாரக்கும்பல் மீது ஒரு நடவடிககையும் எடுககவில்லை.

அகர்தலாவிலும், மாநிலத்தின் மற்ற பகுதிகளிலும் நடைபெற்ற பல்வேறு நிகழ்ச்சிகளையும், ரௌடிக் கும்பல்களின் மீது போலீஸ் ஒரு நடவடிக்கையும் எடுக்காமல் இருக்கும் விநோத போக்கையும் குறிப்பிட்டு திரிபுரா மாநில எதிர்க் கட்சித் தலைவர் தோழர் நிருபன் சக்ரவர்த்தி முதலமைச்சருக்கும், கவர்னருக்கும் ஒரு கடிதம் எழுதியுள்ளார்.

பதினைந்து நாட்களுக்கு முன்புதான் ஜிமியா என்ற குக்கிராமத்தில் ஒருவர் தற்கொலை செய்துகொண்டார். இதையொட்டி அக்கிராமத்தில் போலீஸ் முகாமிடப்பட்டு அப்பகுதி மக்களையே அச்சுறுத்திக் கொண்டிருக்கின்றனர். கிராம மக்களது வீடுகளும், உடமைகளும் போலீசாரால் சூறையாடப்பட்டுள்ளது.

போலீஸ் ஒரு நடவடிக்கையும் எடுக்காததைக் கண்ட ரௌடிக் கும்பல் மேலும் பல வன்முறைச் சம்பவங்களில் ஈடுபடுகின்றன. இந்திரா காங்கிரஸ் ஆதரவு பெற்ற இந்த குண்டர் கும்பல் ஜிரைனியாவிலுள்ள தியாகிகள் நினைவுச் சின்னத்தை தாக்கி சேதப்படுத்தியுள்ளன.

### ஆசிரியர்கள் தாக்கப்பட்டனர்

அதோடுமல்லாது ஜிரைனுவிலுள்ள ஒரு உயர்நிலைப்பள்ளியின் தலைமை ஆசிரியர், மற்ற ஆசிரியர்களையும் தாக்கியுள்ளனர்.

இதையெல்லாம்விட மிகக் கொடூரமான நிகழ்ச்சி என்னவென்ருல். கடந்த செப். 11ம் தேதியன்று சாம்பக் நகரிலுள்ள மார்க்சிஸ்ட் கட்சியின் தீவிர ஊழியர்களும், சி. ஐ. டி.யூ. வின் தலைவர்களுள் ஒருவருமான தோழர் கணிகடேயின் வீட்டை நோக்கி குண்டர்கள் தங்கள் கைகளில் கைத்துப்பாக்கிகள், கை குண்டுகள். கத்திகளை ஏந்திக்கொண்டு படையெடுத்தனர். அவரது வீட்டைச் சுற்றி வளைத்துக் கொண்டு சூறையாடினர். அந்தசமயத்தில் தோழர் மணிக் டே வீட்டில் இல்லாததால் அவர் கொலை செய்யப்படாமல் உயிர் தப்பினுர்,

### முதலமைச்சரின் அசட்டை

இத்தகைய கொலை வெறிச் செயல்களில் ஈடுபடும் ரத்த வெறிபிடித்த குண்டர்களின் பெயர், முகவரி—அங்க அடையாளங்கள் கொண்ட பட்டியலை முதலமைச்சரிடம் சமர்ப்பித்திருந்தும் இது வரை அந்த ரௌடிக் கும்பலின் மீது ஒரு நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை.

திரிபுரா அரசின் இப்போக்கு திரிபுரா மாநில மக்களிடையே பெரும் கொதிப்பை உருவாக்கியுள்ளது.

# அரசு ஊழியருக்கு போனஸ் தருக
## டில்லியில் மாநாடு கூடுகிறது

புதுடெல்லி, அக். 28—
அரசு ஊழியர்களுக்கு போனஸ் தரப்படவேண்டும் என்ற கோரிக்கையை வற்புறுத்துவதற்காக டிசம்பர் 10-ம தேதி இங்கு "தேசிய போனஸ் மாநாடு" நடைபெறுகிறது. மத்திய அரசு ஊழியர் சங்கங்களின் சம்மேளனம் இம்மாநாட்டைக் கூட்டியுள்ளது.

நவம்பர் 27-ம் தேதியை போனஸ் தினமாகக் கொண்டாடும்படி சம்மேளனத்தில் இணைந்துள்ள எல்லா சங்கங்களும் கேட்டுக் கொள்ளப்பட்டிருப்பதாக சம்மேளத்தின் பொதுச் செயலாளர் எஸ். கே. சுபாஸ் அறிவித்தார்.

அந்த தினத்தில் நாடெங்கும் கூட்டங்கள் நடத்தப் படும்.

மொத்தமுள்ள 2 கோடி தொழிலாளர்களில் போனஸ்சட்டத்தின்வரம்புக்குள் வரக்கூடிய தொழிலாளர்களின் எண்ணிக்கை 35 லட்சமேயாகும்.போனஸ் தொகையின் அளவு எவ்வளவு என்பதைவிட போனஸ் எத்தனை பேருக்கு கிடைக்கிறது என்பதே முக்கியமானதாகும் என்று சம்மேளத்தின் சார்பில் விடப்பட்டிருக்கும் அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

குறைந்த பட்ச கட்டாய போனசின் நோக்கம் அது உற்பத்தித் திறனுடனே லாபததுடனே இணைக்கப் படக்கூடாது என்பதேயாகும் என்றும், போனஸ் என்பது நிறுத்தி வைத்துக் கொடுக்கப்படும ஊதியமே அன்றி வேறல்ல என்றும் அந்த அறிக்கை கூறுகிறது.

## கருவூல ஊழியர்கள் ஆர்ப்பாட்டம்
### அதிகாரியின் போக்குக்கு கண்டனம்

மதுரை, அக். 28—
இன்றும், நேற்றும் காலை 10 மணியளவில் மாவட்டக் கருவூலகத்திற்கு முன்பு கருவூல ஊழியர்கள் கண்டன ஆர்ப்பாட்டம் செய்தனர்.

மாவட்டக் கருவூல அதிகாரி திரு. பி. ஏ. ராமதாஸ் கடைப்பிடித்துவரும் சங்க விரோத நடவடிக்கை. ஊழியர்களை தேவையற்ற முறையில் வேறுஇடங்களுக்கு மாற்றிப் பழி வாங்குதல,பதவிஉயர்வு அளிக்க மறுத்தல போன்ற போக்குகளை எதிர்த்தே இந்த ஆர்ப்பாட்டங்கள் நடந்தன.

இந்த இரு நாட்களிலும் நடந்த ஆர்ப்பாட்டங்களில், கருவூல ஊழியர்களும், என். ஜி. ஓ. ஓ. க்களும் 500க்கு மேற்பட்டோர் கலந்துகொண்டு கோஷங்களை எழுப்பினர்.

திருவாளர்கள் ஜெ. எஸ். பரதன், எப்.எம். குத்புதீன், ஆர். நாகேஸ்வரன் ஆகியோர் ஆர்ப்பாட்டங்களுக்குத் தலைமைவகித்தனர்.

இதே கோரிக்கைகளுக் களுக்காக கடந்த செப். 13ந தேதியும் இதேபோன்று ஆர்ப்பாட்டம் நடைபெற்றது.

## பாலிடெக்னிக் மாணவர் 'கெரோ'
### முதல்வரின் பழிவாங்கலைக் கண்டித்து

மதுரை, அக். 2—
மதுரையில் உள்ள பாலிடெக்னிக் மாணவர்கள் கல்லூரி முதல்வரைச்சுற்றி வளைத்து கெரோ செய்தனர்.

அண்மையில் நடைபெற்ற மாநிலரீதியான பாலிடெக்னிக் மாணவர்களது போராட்டத்தை நடத்திச் சென்ற இக் கல்லூரி மாணவர் பேரவைத தலைவர் முருகேசன் மற்றும் 8 மாணவர்களை இககல்லூரி முதல்வர் விடுதியிலிருந்து நீக்கியதை எதிர்த்தே இந்த முற்றுகைப் போராட்டம்நடந்தது. விடுதியிலிருந்து நீக்கப்பட்ட மாணவர்களுக்கு மீண்டும் விடுதியில் இடமளிக்கக் கோரி முழக்கம் எழுப்பினர்.

இந்த 'கெரோ' சுமார் 3 மணி நேரம் நடந்தது.

இறுதியில் நீக்கப்பட்ட மாணவர்கள் அனைவருக்கும் விடுதியில் இடம் அளிப்பதாகமுதல்வர் உறுதி அளித்தவுடன் முற்றுகைப் போராட்டத்தை மாணவர்கள் நிறுத்தினர்.

வெற்றி முழக்கங்களை எழுப்பி, மாணவர்கள் ஊர்வலமும் நடத்தினர்.




## வ.உ.சி. பாலத்தின் பெயரை துலங்கச் செய்வீர்!

ஐயா,

சாலைகள், பாலங்களுக்கு தலைவர்கள், தேசபக்தர்கள் பெயர்களை வைத்துப் பெருமைப்படுத்தி, பிரபலப்படுத்தும் இந்நாளிலும் கூட, மதுரை நகரின் முக்கிய பாலம். "ஆல்பர்ட் விக்டர் பாலம்" "பெரிய பாலம்" என பழைய பெயரிலேயே இன்றும் இருந்து வருகிறது.

இந்தப் பாலத்திற்கு தேசபக்தர் வ. உ. சிதம்பரம் பிள்ளை அவர்கள் பெயரால் "வ. உ. சிதம்பரனுர் பாலம்" என 18 வருடங்களுக்கு முன்பாகவே வைக்கப்பட்டது.

ஆனுல் இன்றுவரை அந்தப் பாலத்தின் பெயரைக் குறிக்கும்படியான பெயர்ப் பலகை எதுவும் அங்கு வைக்கப்படவில்லை. இதனுல், பிரபலமில்லாமல் இருந்து வருகிறது.

இவ்வாறு பிரபலமில்லாமல் இருந்துவந்தால், நாளை அந்தப் பாலத்திற்கு புதிதாக ஒரு பெயரை வைக்க வேண்டுமென்று ஒரு கோரிக்கையும், அதற்கு வேறு பெயரை வைக்க வேண்டுமென்று மறு கோரிக்கையும் எழுந்து சர்ச்சையை உண்டாக்கி விடலாம்.

உண்மை தேசபக்தர்கள் பெயரை பிரபலப்படுத்துவதில் சிலர் வேண்டுமென்றே அக்கறை காட்டாமல் இருந்ததால் இக் குறை ஏற்பட்டது. தற்போது இக்குறையை நிவர்த்திக்கும் கட்டம் வந்துவிட்டது.

மத்திய அரசு தபால்தலை வெளியிட்டு பெருமைப் படுத்தியிருக்கிறது.

சென்னையில், வ. உ. சி. நகர் என்று ஒரு பகுதிக்கே பெயர் சூட்டியிருக்கிருர்கள்.

வ. உ. சி. நூற்றுண்டு விழாக் கொண்டாடபபடும் இக்காலத்தில் இதற்கு ஒரு விழா எடுப்பது சிறப்பாகும்.

ஆகவே, மதுரையில் தேசபக்தர் சிதம்பரம்பிள்ளை பெயர் விளங்க மதுரை மாநகராட்சி நடவடிக்கை எடுக்குமா?

இப்படிக்கு,

எஸ். அலாவுதீன்,

மதுரை.

# நாட்டு நடப்பு

## மதியழகன்—எம். ஜி. ஆர். திடீர் சந்திப்பு

தமிழ்நாடு சட்டமன்ற சபாநாயகர் திரு. கே. ஏ. மதியழகன், 27-ம் தேதி திடீர் என்று எம். ஜி. ஆரின் ஸ்டுடியோவுக்குப் போய் எம். ஜி. ஆரைச் சந்தித்தார்.

சந்தித்த காரணங்களைக் கேட்டபோது, சொல்ல மறுத்துவிட்டார்.

## தி. மு. க. பிளவு சிண்டி ஆலோசனை

புனு நகரில் கூடிய சிண்டிகேட் காங்கிரஸ் காரியக்கமிட்டியின் கூட்டத்தில், தி. மு. க. பிளவு பற்றி ஆலோசனை நடத்தப்பட்டது. தி. மு. க. வுடன் சம்பந்தப்படாமல் பொறுத்திருந்து பார்ப்பது என முடிவு செய்யப்பட்டது.

## இந்திரா அரசு மீது குற்றச்சாட்டு

ஆளும் காங்கிரசும் அதன் தலைமையும் சர்வாதிகாரமாக நடப்பதாகவும், ஆளும் காங்கிரஸே நிரந்தரமாக ஆட்சியில் இருப்பதற்காகவே எதேச்சதிகாரத்தில் இறங்குவதாகவும் புனுவில் கூடிய சிண்டிகேட் காங்கிரஸ் கண்டித்தது.

இந்திய சர்க்கார் சீனுவுடன் சீக்கிரமே உடன்பாடு காணவேண்டுமென்றும் வற்புறுத்தியது.

## மொரார்ஜி ஜோஷ்யம்

இன்னும 18 மாதங்களுக்குள் மத்திய சர்க்கார் கவிழ்ந்துவிடுமென்றும், கவிழுவதற்கு தன்னுலான முயற்சிகளைச் செய்துவிடுவதாகவும், தமிழ்நாடு உட்பட பல ராஜ்யங்களிலும், மத்தியிலும் பழைய காங்கிரஸ் ஆட்சி வரலாமென்றும் மொரார்ஜி தேசாய் கூறினுர்.

## பூட்டோ யோசனை

ஜப்பான், அமெரிக்கா உட்பட உலகிலுள்ள பல பெரிய நாடுகளே சீனுவிடன் உறவு கொள்ள முந்தும்போது, சாமான்யர்களாகிய நாம் ஏன் விலகியிருக்க வேண்டும்? சீனுவுடன் தனது உறவை இந்தியா சீர்திருத்திக்கொள்ள வேண்டும் என்று பூட்டோ கூறினுர்.

## கேடயம் திருட்டு

மதுரை மாநகராட்சிக்கு முன்னுள் ஜனுதிபதி ராதாகிருஷ்ணன் வழங்கிய தங்கமுலாம் பூசப்பட்ட கோபுர வடிவ கேடயத்தை யாரோ திருடி விட்டார்களாம்.

## கோட்டை முன் வலது கம்யூ. ஆர்ப்பாட்டம்

தமிழ்நாடு சட்ட மன்றத்தின் அடுத்த கூட்டம் ஆரம்பமாகும்போது. தி. மு. க. அரசு மீது நம்பிக்கை இல்லை என்பதைத் தெரிவிக்க வலது கம்யூனிஸ்டுகள் கோட்டை முன் ஆர்ப்பாட்டம் செய்வார்களாம். தமிழ்நாடு வலது கமயூனிஸ்ட் கட்சி உதவிச்செயலாளர் கே. டி. ராஜூ அக். 27ல் திருச்சியில் இச்செய்தியை அறிவித்தார்.

## இரட்டைக் குழல் துப்பாக்கி சத்தியவாணி முத்து வர்ணனை

50 எம். எல். ஏ.க்கள் போனுலும் போகட்டுமே! என்ன ஆகிவிடும்? இந்தச் சண்டை, எதிர்க் கட்சிக்குக் கொண்டாட்டம் இது எத்தனை நாள் நீடிக்கும்? பிறகு இரட்டைக்குழல் துப்பாக்கியாயிருப்போம். இரண்டும் அண்ணு கொடிதான். திரும்பிவரத்தான் போகிருர்கள். சேர்த்துக்கொள்வோம் ஊளையிடும் கூட்டம் ஏமாறப்போகிறது. கொடியில் அண்ணு படம் போட்டதற்கு எம். ஜி. ஆரைப்பாராட்டுகிறேன்,நன்றியுமதெரிவிக்கிறேன் மகிழ்ச்சியும் அடைகிறேன். குடும்பச் சண்டையில் எங்களைப் பிரிக்கமுடியாது—இவ்வாறு, அமைச்சர் திருமதி சத்தியவாணி முத்து 27-ம் தேதி தஞ்சையில் கூறினுர்.

## இண்டி காங்கிரஸ் பின்பலமாம் கண்ணதாசன் கூறியது

தற்போது எம். ஜி. ஆரின் நடவடிக்கைகளுக்கு இந்திரா காங்கிரசின் பின்பலம் இருப்பதாகவும், இல்லாவிட்டால் எம். ஜி. ஆர். இவ்வளவு தைரியமாக இப்படி இறங்கியிருக்க மாட்டார் என்றும், கண்ணதாசன் அக்டோபர் 27-ல் புதுக்கோட்டையில் கூறினுர்.

## முதலமைச்சர்களின் மொத்தக்கொள்ளை
### 4 தலைமுறைகளுக்கும் சேர்த்து

நம்முடைய நாட்டிலே ஒழுக்கமெல்லாம் தகர்ந்து தவிடு பொடியாகிவிட்டது;தார்மீக ஒழுக்கம் என்பது, மரணப்படுக்கையில்தான் கிடக்கிறது.

முதலமைச்சர்கள் அடிக்கிற கொள்ளை இருக்கே அது அவர்களுக்கு மட்டுமல்ல மூன்று அல்லது நான்கு தலைமுறைகளுக்கும் சேர்த்து இப்பொழுதே சொத்துக் குவிக்கிருர்கள் என்று 10-10-72-ல் ம. பி. முதலமைச்சர் பி. சி. சேத்தி கூறினுர்.

# நெடுங்காடு மில் தொழிலாளருக்கு ஐ. என். டி. யு. சி. துரோகம்

## மில் தொழிலாளர் சங்கம் கண்டனம்

காரைக்கால், அக். 25—

காரைக்கால், நெடுங்காடு சௌந்திராஜாமில்ஸ் தொழிலாளர்களுக்கு இந்த ஆண்டு 25 சத போனஸ் வேண்டுமென்று மில் தொழிலாளர் சங்கம் வைத்திருந்த கோரிக்கையை தி. மு. க. யூனியனும் ஆதரித்தது.

அந்த மில்லில் நமது சங்கம் இந்த மாதம்தான் தொழிலாளர்கள் விருப்பத்திற்கிணங்க ஆரம்பிக்கப்பட்டு போனஸ் சம்பந்தமான பிரசுரம் கொண்டு வந்தோம்.

மற்ற சங்கங்களுடன் ஒன்றுபட்ட நடவடிக்கையில் இறங்க முயற்சி எடுத்தது. அதை தி. நூ. தொ. மு. ச. வரவேற்றது. நம்முடன் ஒன்றுபட்ட நடவடிக்கையில் ஈடுபட்டது. இதைக் கண்ட கிலி பிடித்து ஐ. என். டி. யூ. சி. தலைவர்களை இரவோடு இரவாக திண்டுக்கல்லுக்கு அழைத்து, அங்கேயே ஒரு ஒப்பந்தத்தை தயார் செய்து 18 (1) பிரிவில் ஒப்பந்தம் செய்து 8.33 போனஸ் என்றும், 7, 67 இனம் என்றும் கையெழுத்திட்டு முடித்துக் கொண்டனர்.

### துரோக உடன்பாடு

நம்முடைய சங்கம் ஆரம்பித்திருப்பதும் - கன்சிலியேஷனுக்கு போனஸ் பிரச்னை எடுத்து கணக்குகளை ஆராயாமல், குறைவான போனசுக்கு கையெழுத்திட்டு ஐ. என். டி. யூ. சி. யிலேயே அதிருப்தி தோன்றியுள்ளது. 25-10-72 அன்று அவசர அவசரமாக பணத்தையும் நிர்வாகம் பட்டுவாடா செய்துவிட்டது. நமது சங்கமும், தி. நூ. தொ. மு. ச. வும் ஆட்சேபனையுடன் தொழிலாளர்கள் போனசைப் பெற்றுள்ளனர்.

---

# பழிவாங்கலை எதிர்த்துப் போராடும் தொழிலாளர்களுக்கு அநீதி

## முதலமைச்சருக்கு தோழர் வி. பி. சி சிந்தன் கடிதம்

சென்னை, அக். 28—

தொழிற் சங்க முக்கிய ஊழியர் சஸ்பென்ட் செய்யப்பட்டதை எதிர்த்துப் போராடும் தொழிலாளர்களுக்கு தொழிலாளர் அமைச்சர் வழங்கிய நீதி மேலும் 15 பேருக்கு தற்காலிக வேலை நீக்கம், பெரும்பான்மை சங்கத்துடன் பேச்சு நடத்துவதற்கு கோர்ட் மூலம் "தடை" வாங்கிக்கொண்டு தொழிலாளர்கள் "சஸ்பென்ட்" செய்யப்படும் அக்கிரமத்தை எதிர்த்து முதலமைச்சருக்கு சி. ஐ. டி. யூ. தமிழகக் குழு துணைச் செயலாளர் தோழர் வி. பி. சிந்தன் கீழ்வரும் கடிதத்தை எழுதியுள்ளார்.

அம்பத்தூரில் சுமார் 800 தொழிலாளர்களைக் கொண்ட இந்தியா மீட்டர் தொழிற்சாலை சம்பந்தமாகவே இக்கடிதம் எழுதுகிறேன்.

ஜூன் திங்கள் 30ம் தேதி தொழிற்சங்கத்தின் பொருளாளரை விசாரணையின்றி நிர்வாகம் தற்காலிக வேலை நீக்கம் செய்ததை யொட்டி ஒரு நாள உள்ளிருப்புவேலை நிறுத்தம் நடைபெற்றது. ஜூலை முதல் தேதியன்று நிர்வாகம் கதவடைப்பு செய்தது.

சுமுகமான முறையில் பிரச்னையைத் தீர்த்துக் கொள்வதில் நிர்வாகம் எந்தவித அக்கறையும் காட்டவில்லை. மாறாக, பேச்சு வார்த்தைகளை முறியடிக்கும் நோக்கத்தோடு ஒரு சில தொழிலாளிகளை வைத்து போட்டி சங்கம் ஒன்று ஏற்படுத்தி அதன் மூலம் பூந்தமல்லி நீதிமன்றத்திலிருந்து, பெரும்பான்மை சங்கத்தோடு பேச்சு வார்த்தை நடத்தக்கூடாதென்று தடைவாங்கியது. இத்தகைய தடைகள் கொடுப்பது சரியல்ல என்ற உயர்நீதிமன்றத்தின் முடிவு ஏற்கனவே உள்ள போது, பூந்தமல்லி கோர்ட்டின் தீர்ப்பைப் பற்றி நான் விமர்சனம் செய்ய வேண்டியதில்லை என்று நினைக்கிறேன்.

### அமைச்சரின் நீதி

லேபர் ஆபீசரோடு நடத்திய பேச்சு வார்த்தைகளில் எந்த முன்னேற்றமும் இல்லாததால் இறுதியாக தொழில் அமைச்சர் மாண்புமிகு திரு. நடராசனிடம் சென்றோம். தற்காலிக வேலை நிறுத்தம் செய்யப்பட்ட ஒரு தொழிலாளியை வேலைக்கு எடுக்க வேண்டுமென்றும் கதவடைப்பை நீக்க வேண்டுமென்றும் கோரிய 300 தொழிலாளருக்கு அமைச்சர் வழங்கிய நீதி இது தான்.

— தற்காலிவேலை நீக்கம் செய்யப்பட்ட ஒரு தொழிலாளியும் மற்றும் குற்றப் பத்திரிகை வழங்கப்பட்ட 15 பேரும், ஆக மொத்தம் 16 தொழிலாளருக்கு விசாரணை முடியும்வரை வேலை நீக்கம். இவர்கள் யாரும் வேலை நீக்கம் செய்யப்பட மாட்டார்கள் என்ற உத்திரவாதம் கொடுக்கப்படமாட்டாது.

— அப்ரென்டிஸ், காஷுவல் தொழிலாளர்கள் சுமார் 80 பேருக்கு வேலை நீக்கம்.

— மற்ற தொழிலாளர்களுக்கும் உடனடியாக வேலை இல்லை — எப்போது வேண்டுமானாலும் "லே—ஆப்" செய்ய நிர்வாகத்துக்கு உரிமை உண்டு.

கடந்த மூன்று மாதங்களாக முதலாளி என்ன சொல்லிக் கொண்டிருந்தாரோ, அதையேதான் தொழில் அமைச்சரும் கூறுகிறார். அவர்முன் நடந்த என்னற்ற பேச்சு வார்த்தைகளில் தொழிலாளர்களுக்கு இந்த அளவு பாதகம் விளைவிக்கும் ஒரு முடிவுஇருந்ததில்லையென்று நான் கருதுகிறேன்.

### முதலமைச்சரை மிஞ்சும் அதிகாரியின் போக்கு

இந்தத் தகராறில தொழிலாளர் நல இலாகாவின் உயர்அதிகாரி திரு ராஜேந்திரன் மிகவும் ஒரு-தலைபட்சமாகவே நடந்துகொண்டார் என்பதையும் நான் உங்களுக்கு அறிவிக்க விரும்புகிறேன். தொழில் அமைச்சரோடு பேசும் பொழுது விசாரணை நடந்த பிறகு நீக்கம் என்ற தண்டனையை அளிக்காமல இருக்க ஒரு வழி செய்யமுடியாதா? என்று கேட்டேன் அமைச்சரும் இசைவு தந்தார் ஆனல் உடனே திரு. ராஜேந்திரன் குறுக்கிட்டு "சிம்சன்" பாணியிலுள்ள இந்த ஏற்பாடு வேண்டாமென்ருர். தொழிலாளருக்கு முன் பணம் கொடுத்து அதை பின்பு பிடிக்கும் வழக்கம்போல 10 மாத தவணையில் இருக்க வேண்டுமென்று நான் குறிப்பிட்டபோது 5 தவணை போதுமென்று அவர் வாதம் செய்தார்.

சுருங்கக் கூறினல் திரு. ராஜேந்திரன் அமைச்சரை விடத்தான் ஒரு பெரும் அதிகாரி என்ற தோரணையிலேயேப் பேசினர். மேலும், தொழிலாளர் நல இலாகா பிரதிநிதி என்றல்லாமல் இந்தியா மீட்டர் முதலாளியின் வக்கீல் என்ற முறையில்தான் பேசினர். இது மிகவும் வருந்தத்தக்கது. மேலும், இந்த ஆலோசனையை ஏற்றுக்கொள்ளாவிட்டால் வேலை நிறுத்தத்தை தடை செய்வேனென்றும் என்னை அச்சுறுத்தினர். இந்தியா மீட்டர் தொழிலாளர்களுக்கு வழங்கப்பட்ட அநீதி என்பதைவிட அதிகாரிகளின் போக்கு எப்படி முதலாளிகளுக்குச் சாதகமாக இருக்கிறதென்பதையே இது எடுத்துக் காட்டுகிறது.

திரு. ராஜேந்திரன் கூறியபடியே இப்போது தடை உத்திரவும் வழங்கப்பட்டுள்ளது. குறைந்தபட்ச நியாயத்தைக் கோரி அமைச்சரிடம் சென்ற தொழிலாளர்களுக்குக் கிடைத்த பரிசா இது? இதை எப்படித் தொழிலாளர்கள் ஏற்றுக்கொள்ள முடியும்?

### தடை உத்தரவு பயன்பட்டது எப்படி ?

தடை உத்திரவு வந்தவுடனேயே நிர்வாகம் இது வரை குற்றப் பத்திரிகை மட்டுமே வழங்கப்பட்ட 15 தொழிலாளர்களுக்கும் தற்காலிக வேலைநீக்க உத்திரவை வழங்கிவிட்டது. இந்தத்தடை உத்திரவு முதலாளிக்கு எப்படி பயன்பட்டிருக்கிறது என்று பாருங்கள்.

இந்தியா மீட்டர் தொழிலாளர்களுடைய பிரச்னை மிகச் சிறிய பிரச்னை. நிர்வாகம் இதை மிகவும் பெரிதுபடுத்தியிருக்கிறது. வேலைநிறுத்தம் நடந்ததோ ஒரு தொழிலாளியின் வேலை நீக்கத்தை யொட்டித்தான். அதற்குப்பிறகுநிர்வாகம்பல பிரச்னைகளை வேண்டுமென்றே சேர்த்திருக்கிறது. தொழிலாளர்களுடைய ஒரே கோரிக்கை எந்தத் தொழிலாளியும் பழிவாங்கப் படக்கூடாதென்று தான். இந்த உத்திரவாதம் கூட இன்றைக்குக் கிடைக்கவில்லை.

இங்கிலேயில் இந்தியா மீட்டரின் 800 தொழிலாளர்களும் தங்களுடைய மேலான தலையீட்டை கோருகிருர்கள். நீங்கள் இத் தொழில் தகராறில் தலையிட்டு தொழிலாளர்களுக்கு நியாயம் வழங்க வேண்டுமென்று நான் வேண்டி கேட்டுக்கொள்ளுகிறேன்

---

# நேரடி நடவடிக்கையில் இறங்குவோம்

## மண்வளப் பாதுகாப்பு துணை உதவியாளர் சங்கம் மும்முரம்

பொள்ளாச்சி, அக். 28—

தமிழ்நாடு மண்வளப்பாதுகாப்பு துணை உதவியாளர்கள், தங்கள் கோரிக்கைகளைப் பெற போராட்டத்துக்குத் தயாராகி விட்டார்கள்.

இவர்களது சங்கத்தின் செயற்குழு கூட்டம் திருப்பூரில் இம்மாதம் 15,16 தேதிகளில் நடைபெற்றது. மாநில நிர்வாகிகள் அனைவரும், மாநிலமெங்குமிருந்து பிரதிநிதிகளும் இககூட்டத்தில் கலந்து கொண்டார்கள்.

### கோரிக்கைகள்

தமிழக அரசாங்கம் நியமிக்கப்பட்ட ஒரு நபர் ஊதிய முரண்பாடுகளைச் சுட்டிக் காட்டி, கண்டிக்கப்பட்டது.

இந்தக் குழுவானது, சங்கத்தின் நெடுநாள் கோரிக்கைகளுக்கு எந்தவிதமான சாதகமான முடிவும் எடுக்கவில்லை.

17—2—71 தேதிய வேளாண்மை பொறியாளர் அவர்களின்சிபாரிசுபானான இப்போதைய ஊதிய விகிதத்தையும், தேர்வுநிலை துணை உதவியாளர் ஊதிய விகிதத்தையும் மாற்றவேண்டும். தேர்வுநிலை, பதவி உயர்வுக்கு 25 சதவிகிதம் என்றில்லாமல், 7 ஆண்டுகள் பணிபுரிந்தோர்க்கு பதவி உயர்வு தரவேண்டும். பிரிவு அலுவலர் பதவி உயர்வுக்கு 10 சத விகிதம் ஒதுக்கிததர வேண்டும்.

### போராடுவோம்

இந்தக் கோரிக்கைகளை 15—11—72க்குள் அமுலாக்காவிட்டால் அஞ்சலட்டை இயக்கம் நடத்துவோம். ஊதிய மறுப்பு இயக்கம் நடத்துவோம். கறுப்புப் பட்டை அணிவோம். மொத்தமாக விடுப்பு எடுப்போம். இப்படிப்பட்ட நேரடி நடவடிக்கைகள் எடுத்துஅரசின் கவனத்தை ஈர்ப்போம என்று தீர்மானம் நிறைவேற்றினர்கள்.

---

# கவர்மெண்டின் வேலைகளை எல்லாம் காங்கிரஸ் கட்சியே சுருட்டுவதா?

மேற்கு வங்க காங்கிரஸ் ஆட்சியின் ஊழல்களைக் கண்டு பெரும் கொதிப்பு ஏற்பட்டிருக்கிறது.

அரசாங்க வேலைகளுக்கு 17 ஆயிரம் பேர் தேவைப்பட்டது. இவர்களை எப்படி வேலைக்கு எடுத்துக் கொள்ளுவது, என்ற பிரச்னைகள் ஏற்பட்டது.

வழக்கம் போல, வேலைதேடிதரும் அலுவலகத்தில் முறையாகப் பதிந்து கொண்டிருப்பவர்களை வரிசைப்படி எடுக்காமல்—அதையெல்லாம் ஒதுக்கி வைத்துவிட்டு—அந்தந்த மாவட்டத்தில் உள்ள காங்கிரஸ்தலைவர்கள் யார்யாரை வேலைக்கு எடுத்துக் கொள்ள வேண்டும் என்று பட்டியல் கொடுக்கிருர்களோ, அந்தப்பட்டியலில் கண்டுள்ளவர்களை மட்டுமே வேலைக்கு எடுத்துக் கொள்ள வேண்டும் என்று முதலமைச்சர்ரேயிடமிருந்து கட்டளை வந்தது.

### அடிதடி

பாரபட்சமான இந்த நடவடிக்கையிலும் கூட் மாவட்ட காங்கிரஸ் கட்சியிலுள்ள பல்வேறு கோஷ்டிகளுக்குள்ளே புகைச்சல் ஆரம்பித்து விட்டது. ஒவ்வொரு கோஷ்டியும் தத்தம் கோஷ்டிக்கே அதிக ஸ்தானங்கள் ஒதுக்க வேண்டுமென்று குடுமிப்பிடிப்போரில் ஈடுபட்டார்கள். இதற்கிடையில் முறையாகப் பதிந்தவர்களுக்கு வேலை கொடுக்காமல் இருப்பது சரியல்ல என்று பெரும் கண்டனம் கிளம்பியது.

### விளம்பர மோசடி

கண்டனத்தைக் கண்ட பிறகு, ஒரு மோசடி வேலையை காங்கிரஸ் கட்சி செய்தது. அதாவது வேலைக்கு விண்ணப்பம் செய்யுங்கள் என்று கொட்டை எழுத்துக்களில் விளம்பரம் செய்தார்கள். ஆனல் யாருக்கு விண்ணப்பம் செய்யவேண்டும், எந்த விலாசத்துக்கு விண்ணப்பம் செய்ய வேண்டும் என்று ஒரு விபரமும் கிடையாது. அதனல், அந்த விலாசத்தை தேடி அலைந்தோர் எண்ணிக்கை பல லட்சம். எப்படி அலைந்தும் விலாசம் தெரியவில்லை. மோசடி இதுமட்டுமல்ல.

### அவர்களே கமிட்டி

இன்னெரு ஊழலைக் கேளுங்கள். 17,000 பேர்களை வேலைக்கு எடுக்க, ஒரு போர்டு ஏற்படுத்தினர்கள். அதில் யார் யார் மெம்பர்கள்தெரியுமா? ஒருவர் முதலமைச்சர்ரே, இரண்டாவது ஆள், மாநில காங்கிரஸ் பொதுச் செயலாளர் பிரியரஞ்சன்தாஸ் முன்ஷி, மூன்ருவது ஆள் மாநிலக் காங்கிரஸின் இன்னெரு செக்ரடரி சௌகத்ராய்!

இப்படிப்பட்ட ஒரு கேடுகெட்ட ஊழலை எந்த மாநிலத்திலாவது பார்க்க முடியுமா? சட்டத்தில் இதற்கு இடம் உண்டா?

தகுதி உள்ள வாலிபர்கள் எததனையோ பேர் ஆண்டுக்கணக்கில்வரிசையில்காத்திருக்கும்போது—பங்களாதேஷ் அகதி முகாம் எடுக்கப்பட்டு விட்டதால், அதில் வேலையிழந்த அரசு ஊழியர்கள் ஏராளமாகக் காத்திருக்கும் போது—காங்கிரஸ் கட்சியினருக்கு மட்டுமே வேலை கொடுக்கக் கூடிய இந்த ஏற்பாட்டை பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

---

# துப்பாக்கிச் சூட்டிற்கு

## மாணவர்கள் கண்டனம்

மதுரை, அக். 28—

போடியில்மாணவர்கள்மீது நடந்த போலீஸ் துப்பாக்கிச் சூட்டைக் கண்டித்து, நேற்று உத்தமபாளையம் கல்லூரி மாணவர்கள் ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடத்தினர்.

மதுரையில் சௌராஷ்டிரா கல்லூரி மாணவர்களும், திருவெறும்பூரில் தொழில் பயிற்சி பள்ளி மாணவர்களும் கண்டன ஆர்ப்பாட்டம நடத்தினர்.

---

# நமணசமுத்திரத்தில் "கெரோ"

புதுக்கோட்டை அக். 27—

நமண சமுத்திரம் பஞ்சாலையில் நேற்று சி. ஐ. டி. யூ. சங்கத் தொழிலாளர்கள் "கெரோ" போராட்டம் நடத்தினர். ஆலை நிர்வாகக் காரியதரிசியையும், நிர்வாகம் சம்பந்தப்பட்ட மற்றவர்களையும் தொழிலாளர்கள் சுற்றி வளைத்துக் கொண்டனர்.

உடனடியாக போனஸ் வழங்கக் கோரியும், காஷுவல் லீவு சம்பளத்தைஅளிக்கக் கோரியும் கெரோ நடைபெற்றது.

---

# தோழர் அழிக்கோடன் குடும்ப நிதி

திருவனந்தபுரம். அக். 29—

கொலைகார அரசியல் வாதிகளால் படுகொலை செய்யப்பட்ட தோழர் அழிக்கோடன் ராகவன் குடும்பத்துக்கு நிதியளித்து உதவுமாறு கேரள மாநில மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி. மக்களுக்கு வேண்டுகோள் விடுத்திருந்தது. இதை ஏற்று அழிக்கோடன் குடும்பத்துக்கு மக்கள் மனமுவந்து அனுதாபத்துடன் நிதியளித்து வருகின்றனர். அக்டோபர் 27ம் தேதி வரை ரூ. 27,176 நிதியளித்துள்ளனர்.

---

# வருங்காலத்தில் ரயில்கள் இருக்குமா?

மாஸ்கோ, அக். 28—

இன்றைய ரயில்களுக்கு அந்திம காலம் நெருங்கி விட்டது என்று கருதக் கூடியவர்களும் உலகில் உள்ளனர். மேலை நாடுகள் பலவற்றில் ரயில் போக்குவரத்து மிகவும் குறைந்திருப்பதே இவ்வாறு கூறுவதற்குக் காரணமாக இருக்கலாம்.

ஒற்றைத் தண்டவாளத்தில் வேகமாக ஓடக்கூடிய ரயில்களுக்கே இனி வருங்காலம உண்டு என்று சிலர் கூறலாம். இத்தகைய ரயில்கள் சில நாடுகளில் ஓடவும் செய்கின்றன. எனினும் இந்த ரயில்கள் நகரப்போக்குவரத்துக்கே பயன்படும். தொலைதூரப் பயணங்களுக்கு இதனைப் பயன்படுத்த இயலாது.

வருங்காலத்தில் மிகத் துரிதமாகச் செல்லும் ரயில்களை உருவாக்கும் போக்கே நிலவும்.

அப்படியென்ருல் ரயில்களுக்கு அந்திம காலம் வந்துவிட்டது என்று கூற முடியுமா?

சைபர்னெட்டிக்ஸ் மூலம் ரயில்களை இயக்குவது ஒரு பெரிய விஷயமாகும். தானுகவே ஓடும் ரயில்களும உருவாக்கப்பட்டு வெள்ளோட்டம் விடப்பட்டுள்ளன, எனவே அத்தகைய ரயில்களுக்கு பெரிய வருங்காலம் உண்டு என்றே சொல்லலாம். மேலை நாடுகளும்இத்தகைய முடிவுக்கே வந்துள்ளன.

---

# சந்திரனுக்கு "குழாய் வழிப்பாதை!"

மாஸ்கோ, அக். 27—

வருங்காலப் போக்குவரத்து வசதிகளைப் பற்றிப் பேசுகையில், குழாய் வழிப் பாதைகளையும் நாம் மறந்துவிடுவதற்கில்லை. குழாய்களின் வழியே எரிவாயு, எண்ணெய், பால், நிலக்கரி, தண்ணீர் முதலியவை செல்கின்றன. பாதாள ரயில்களும் குழாய்களின் வழியாகத்தான் செல்கின்றன. எனவே வருங்காலத்தில் குழாய் வழிப்பாதைகள், ரயில் போக்குவரத்துக்கும் பயன்படும். அதே சமயத்தில், பூமிக்கும் சந்திரனுக்கும் இடையே ஒரு "குழாய் வழி மார்க்கமும்" தோன்றக் கூடும் என்று சொன்னல், அது இன்று விசித்திரமாகப்படும். என்ருலும் ஒளியால் உருவான இத்தகைய விசித்திரமான மார்க்கத்தை உருவாக்கலாம் என்ற கருத்தும் உலகில் இருந்து வருகிறது. இந்தக் "குழாய் வழி" பெரிய விட்டத்தினைக் கொண்ட லேசர் கதிரினல் உருவாக்கப்படும். இதன்மூலம் வாயுக்களை இங்கிருந்து சந்திரனுக்கு அனுப்பிவைக்கலாம். அதாவது, ஒளியால் ஆன சுவர்களைக் கொண்ட குழாய்வழி மூலமாக வாயுக்கள் செல்லும், உண்மையில் இது நடக்கக்கூடிய காரியம்தானு? கொள்கையளவில் பார்த்தால், இது நடக்கக்கூடிய காரியம் தான்.

—"கல்ச்சர் அண்டு லைஃப்" பத்திரிகையில் வெளியானது.

---

# தர்மபுரி அரசினர் கல்லூரி மாணவர் வேலைநிறுத்தம்

தர்மபுரி, அக். 28—

தமிழக மெங்கும் பல இடங்களில் மாணவர்கள் மீது ஏவி விடப்பட்ட அடக்கு முறையைக் கண்டித்தும், 22-10-72ல் நடைபெற்ற தி. மு. க. பொதுக் கூட்டத்தின்போது தர்மபுரி நகரசபைத் தலைவர், தர்மபுரி கல்லூரி மன்ற உதவித் தலைவரை அடித்ததைக் கண்டித்தும், நீண்ட நாட்களாக மாணவர்கள் போராடிவருமபல்கலைக்கழக செனட்டில் மாணவர்கட்கு பிரதிநிதித்துவம், மாணவர் சங்கம் அமைத்துக்கொள்ள உரிமை, வேலைவேண்டும் அதுவரை உதவித தொகை வேண்டும என்பனபோன்ற நியாயமான 24 கோரிக்கைகளுக்காகவும் தர்மபுரி அரசு கலைக் கல்லூரி மாணவர்கள் 20-10-72 முதல் வேலை நிறுத்தம் செய்து வருகின்றனர்.

அன்று பெரும் ஊர்வலமும், ஊர்வல முடிவில் பொதுக்கூட்டமும் நடைபெற்றது. கூட்டத்தில் அடக்குமுறைக்கு எதிர்ப்பு தெரிவிக்கப்பட்டது. பொதுக்கூட்டத்தில் வேலை நிறுத்தம் நடைபெறுவதின் அவசியத்தை கல்லூரி மன்றத் தலைவர். தோழர் செ. பழனியப்பன் (எஸ். எப். ஐ.) விளக்கிப் பேசினர். வேலை நிறுத்தம் தொடர்ந்து நடைபெறுகிறது.

---

# தி. மு. க. விலிருந்து எம். ஜி. ஆர். ராஜினமா

சென்னை, அக். 28—

அண்ணு தி. மு. க. ஸ்தாபகர் திரு. எம். ஜி. ஆர். இன்று தி. மு. க. விலிருந்து ராஜினமா செய்துள்ளார். இனிமேல் தனக்கும் தி. மு. க. வுக்கும் எவ்வித தொடர்பும் கிடையாது என அறிவித்துள்ளார். தம்முடைய ராஜினமாக் கடிதத்தை தி. மு. க. பொதுச் செயலாளர் திரு. நெடுஞ்செழியனுக்கு ஏற்கனவே அனுப்பி உள்ளதாகவும் கூறினர்.

---

# தமிழக சட்டமன்றம் கூடுகிறது

சென்னை, அக். 28—

தமிழக சட்டமன்றம் நவம்பர் 13-ம் தேதி காலை 10 மணிக்கும் மேலவை மாலை 4-மணிக்கும் கூடும் என சபாநாயகர் திரு. மதியழகனும், மேலவைத் தலைவர் திரு. சி.பி. சிற்றரசுவும் அறிவித்துள்ளனர்.

சட்டமன்றம் ஒரு வாரத்திற்கு தொடர்ந்து நடைபெறும் எனவும் அறிவித்துள்ளனர்.

---

# சிங்கம்புணரியில் மறியல்

இராமநாதபுரம். அக். 30—

இராமநாதபுரம் மாவட்டம் சிங்கம்புணரியில் சப்-ரிஜிஸ்திரார் அலுவலகம் முன்பு தோழர் பி. சி. சி. பெரியய்யா தலைமையில் விலைவாசி உயர்வைக் கண்டித்தும் வேலையில்லாத் திண்டாட்டத்தை எதிர்த்தும் 18—10—72-ல் மறியல் நடத்தினர்கள்.

அன்று நகரின் முக்கிய வீதிகளின் வழியாக ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடந்தது.

மறியல் செய்த அனைவரும் கைது செய்யப்பட்டனர்.

---

# இந்திராவின் சோசலிசம்

ஏகபோக முதலாளிகளை கட்டுப்படுத்துவதாகச் சொல்லி ஆட்சி பீடம் ஏறிய இந்திரா சர்க்கார் - ஆட்சிக்கு வந்ததும்-ஏகபோகங்களை கட்டுப்படுத்துகிறதா? அல்லது வளர்க்கிறதா? புள்ளிவிவரங்கள் சொல்லுவது என்ன?

இந்திய அரசாங்கம் ஏற்படுத்தியுள்ள தொழில் வளர்ச்சி வங்கிகள், மற்றும் எல். ஐ. சி. போன்ற நிறுவனங்கள் 1972 மார்ச் 31ம் தேதியுடன் முடியும சென்ற நிதியாண்டில் மட்டும் யாருக்கு பணம் கொடுத்திருக்கின்றன?

இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கி (ஐ. டி. பி) 22 பெரிய தொழில் நிறுவனங்களுக்கு மட்டும் ரூ. 63 கோடியே 85 லட்சம் வழங்கியுள்ளது. இத தொகை சென்ற நிதியாண்டில் இந்தபாங்கு வழங்கிய மொத்த கடன் தொகையில் 53 2 சதமானமாகும். (அதாவது பாதிக்கு மேல்)

— தொழில் நிதியுதவிக் கழகம் (ஐ. எப். சி.) 77 கோடியே 85லட்சம் ரூபாயை 40 பெரிய தொழில் நிறுவனங்களுக்கு அளித்துள்ளது. இத் தொகை ஐ. எப். சி. நிறுவனம் அளித்துள்ள மொத்தத் தொகையில் 30 சதமானமாகும்.

— எல். ஐ. சி. நிறுவனம் 12 பெரிய தொழில் நிறுவனங்களுக்கு மட்டும் ரூ. 17 கோடியே 54 லட்சம் வழங்கியுள்ளது. இத்தொகை எல்.ஐ.சி. நிறுவனம் வழங்கியுள்ள மொத்த கடனுதவியில் 66 சதமானமாகும். (கிட்டத்தட்ட முக்கால் பகுதி)

— ஐ. சி. ஐ. சி. ஐ. என்ற தொழில் வளர்ச்சிக் கழகம் 53பெரிய தொழில் நிறுவனங்களுக்கு 93 கோடியே 31 லட்சம் ரூபாய் கடன் வழங்கியுள்ளது. இது இந்த வங்கி வழங்கிய மொத்தக் கடனில் 47 சதமானமாகும்.

இப்படித்தான் அமுலாகிறது இந்திரா காங்கிரசின் ஏகபோக முதலாளிகளை கட்டுப்படுத்தும் கொள்கை.

# காங்கிரஸ் பற்றி இரு தி. மு. க. க்கள் நிலை என்ன?

பத்திரிகைகளைப் பிரித்தால், தமிழகத்தில் ஏதோ ஒரு உள்நாட்டு யுத்தம்தான் நடக்கிறதோஎனச்சந்தேகம் எழும்.

அமைச்சர்களின் கூட்டங்களில் அமளி! அடிதடி! கவர்ச்சி மிக்க முதலமைச்சரின் தமிழ்கூட.கலாட்டாக்களை அடக்கப் போதுமானதாயில்லை கால்மணி நேரத்தில் கூட்டம் கலைகிறது.

நேற்றுவரை மரியாதைக்குரியவர்களாயிருந்த மாவட்டச் செயலாளர்கள், இன்று மக்கள்முன் வரப் பயந்து திரைமூடிய கார்களில் விரைவாகப் பறக்கிறார்கள்.

கழகத் தலைவர்கள் கேலிக்குரியவர்களாகிறார்கள்! கழகத்தைத் தாக்கும் பத்திரிகைகளின் விற்பனை 'விஷ ஜுரம்' போல் ஏறுகிறது.

நாலுபேர் கூடினால், அவர்கள் பேச்சின் நடுநாயகமாகக் கழகம் கதைப்பொருளாகிறது.

'குடும்பத் தகராறை' எட்டிப் பார்பபது அநாகரிகம் என்றுதான் மார்க்சிஸ்ட் கட்சி கருதுகிறது. ஆனால் கழகத்தின் ''பாகப்பிரிவினைச் சிக்கலால் சில அரசியல் பாதிப்புகள் நிகழக்கூடும் என்பதால், அவர்களின் 'பாகப் பிரிவினை' நம் பரிசீலனைக்குரியதாகிறது.

இந்தப் பிளவை பயன்படுத்தி முதலெடுக்க காங்கிரஸ் கட்சி கழுகுபோல் காத்துக்கொண்டிருக்கிறது என்பதை நாம் மறக்கலாகாது.

எம். ஜி. ஆரின் 'அண்ணா தி. மு. க.' 'அம்மா தி மு. க. வாக' மாறும் என்று சிலர் சந்தேகம் கிளப்பியுள்ளனர்.

இந்திராவின் ராஜ மகுடத்தில், காங்கிரஸ் கற்களே பதிக்கப்பட்டிருக்கும்போது, தமிழகத்தில் மட்டும் ஒரு 'கண்ணாடிக்கல்லாகக்' கழக அரசு பதிவாகியிருப்பது தேவியின் பரிபாலனத்துக்குத் 'திருஷ்டிச்' சின்னம் என்று டில்லி பாதுஷாக்கள் கருதுகின்றனர்.

இந்தச் சாத்தியங்கள்'எல்லாம் 'சத்தியங்களின்' பெயரால் புதிய வடிவெடுப்பது சாத்தியம் மட்டுமல்ல; சரித்திரமும்கூட!

இந்தச் சரித்திரத்தின் சமீபகால நாயகர்களாக 'வலம்' வந்துகொண்டிருக்கும் வலதுகள்,

"அச்சுதா! அமரர் ஏறே! ஆளுவோர் கொழுந்தே!
இச் சகம் தரினும் வேண்டேன்; இந்திரா லோகம் ஆளும்
அச்சுகம்! அதுவே சுகம்"

என்று கேரளத்தில் வீசியெறியப்பட்ட பதவித் துண்டுக்காக வங்கத்தில் வர்க்கப் படுகொலைகளுக்கு படி 'வாசல்' திறந்து விடுகிறார்கள் என்பதைக் காணும்போது, கட்சிகளைப் பிளப்பதிலும், கவிழ்ப்பதிலும் பிரதமருக்குள்ள 'பேராற்றலையும்' 'பிரத்தியேகத் திறனையும் நாம் அங்கீகரித்தே ஆகவேண்டும்!

எம். ஜி. ராமச்சந்திரன்; 'இந்திராஜி' ராமச்சந்திரனாக மாறக்கூடாது என்பதே நம ஆசை! என்றாலும் ஆளும் காங்கிரசுடன் மேலும் ஒரு காங்கிரசாக மாறுவதுதான் எம். ஜி. ஆரின் அரசியல் பரிணாமம் என்றால். அந்தப் பரிணாமத்தின் 'பரிமாணம' மிகச் சீக்கிரமே சிதைந்துவிடும என்பதை மட்டும் எச்சரிக்கிறோம்.

எம். ஜி. ஆர். கழகத்தை ''ஒட்டுக் காங்கிரஸ்'' என்று கருணாநிதி இன்று வர்ணிக்கத் தொடங்கியுள்ளார்.

ஒன்றாயிருந்த காங்கிரஸ் உடைந்த காங்ரகிரசாகி எழுபத்தொன்றில் தேர்தலுக்கு வந்தபோது, அதில் ஒறறைக்காங்கிரசை எடுத்துக்கொண்டு,''இதுதான்உண்மைக் காங்கிரஸ்! இதற்கு ஓட்டுப் போடுங்கள்'' என்று ஊர் ஊராக முழங்கியவர் கலைஞர். கழகக் கொடியும் காங்கிரஸ் கொடியும், கலந்து பறந்து தழுவி விளையாடிய காட்சியைக் கண்ட 'கழகக் கண்மணி'யிடம் போய்,— ''கழகத்திற்கும், காங்கிரசுக்கும் ஒரே கொள்கைதான்'' என்று நமப வைக்கப்பட்ட 'கழகக் கண்மணி'யிடம் போய்— இன்று, 'எம். ஜி ஆர். கட்சி ஒட்டுக் காங்கிரஸ்' என்று இப்போது சூடேற்ற முயன்றால், அது என்னாகும்? நனைந்த தீப்பெட்டியின் நமத்துப்போன கந்தகமாகிக் கிடக்கிறானே 'கழகக் கண்மணி! அவனது காங்கிரஸ் எதிர்ப்புணர்வு 'நமத்துப்' போனதறகுக் கலைஞரின் கழகத் தலைமை காரணமல்லவா?

ஆகவே, ''எம். ஜி. ஆர். கட்சி ஒட்டுக் காங்கிரஸ் என்றால், 71-ல் கருணாநிதியின் கட்சி என்ன, ஒட்டுக்காங்கிரசா? என்று 'கழகக் கண்மணி'', கேட்கமாட்டானா?

அன்று மட்டுமல்ல; அன்றிலிருந்து இன்றுவரை— கழக அரசின் கொள்கைகள் காங்கிரஸ் அரசின் பாதையிலிருந்து எங்கே, எப்போது, எந்த வகையில் மாறுபட்டுள்ளன?

— தொழிலாளர் கொள்கை
— போலீஸ் கொள்கை
— நிலச் சீர்திருத்தம்
— விவசாயத் தொழிலாளர் கொள்கை
— வரிக் கொள்கை
— விலைவாசிக் கொள்கை
— வேலையின்மைப் பிரச்சினை
— டாட்டா, டால்மியாக்களுக்கு ஆதரவுக் கொள்கை
— நெசவாளர் பிரச்சினை
— ஆசிரியர் பிரச்சினை
— அரசு ஊழியர் பிரச்சினை
— டிராக்டர் பிரச்சினை
— விசைத்தறிக் கொள்கை
— கம்ப்யூட்டர் கொள்கை
— தொழிற்சங்கக் கொள்கை

இவை அனைத்திலும் முதலாளிகளுக்கு ஆதரவாக காமராஜரும், இந்திராவும் எடுத்த நிலைகளுக்கு மாறாக கருணாநிதி வேறொரு நிலையை எடுத்தார் என்று யாராவது விரலை மடக்க முடியுமா?

அதுமட்டுமா?

எம். ஜி. ஆர். கட்சியை 'ஒட்டுக்காங்கிரஸ் என்கிற அதே வாயால்,

"கழகம் பிளவு பட்டதில் தாயுள்ளம் கொண்ட இந்திரா அம்மையாருக்குப் பெறுாப்பிருக்காது. மூல விக்கிரகம் அல்ல — சில உற்சவ மூர்த்திகள்தான் பிளவுக்குக் காரணம்" என்று 'அம்மையாருக்கு' இன்றுகூட அபிஷேகம் செய்யும் அடிமைத் தனம் போகவில்லையென்றால் கலைஞரின் 'ஒட்டுக் காங்கிரஸ்' வர்ணனையைக் கேட்டு எந்தத் தொண்டன் சீற்றம் கொள்ளப்போகிறான் எம். ஜி. ஆர். மீது?

நமக்குள்ள கவலை என்னவென்றால், இந்திராவுக்கு அதிகமாக 'சோப்புப்' போடுவதில் நீ பெரியவனா? நான் பெரியவனா? நீ முந்தியா? நான் முந்தியா? என்று போட்டி உருவாகக் கூடாதே என்பதேயாகும்.

—தணிகைச்செல்வன்.

# உகண்டாவிலிருந்து 18,500 பேர் வெளியேற்றம்

லண்டன், அக். 29—

உகண்டாவிலிருந்து வெளியேற்றப்பட்ட 18500 ஆசியஇனத்தவர் லண்டன் வந்து சேர்ந்திருப்பதாகவும் இன்னும் 4000லிருந்து 5000 பேர் விரைவில் வருவர் என்று எதிர்பார்க்கப்படுவதாகவும் பிரிட்டிஷ் அரசாங்க செய்தி ஒன்று கூறுகிறது.

இந்தியா, பாகிஸ்தான், பங்களாதேசம் ஆகியவை உகண்டாவிலிருந்து வெளியேற்றப்படும் தங்கள் பிரஜைகளை ஏற்றுக்கொண்டுள்ளதாகவும், இந்த வகையில் 2000 பேர் வந்திருப்பதாகவும் பிரிட்டிஷ் பார்லிமென்டில் அறிவிக்கப்பட்டது.

கானடா 5000 லிருந்து 6000 அகதிகளையும் மாலாவி 500 லிருந்து 1800 பேரையும் நியூஜிலாந்து 2000 பேரையும ஏற்று கொள்ளச் சம்மதித்திருப்பதாகவும் அறிவிககப்பட்டது.

## மாநாடு கண்டனம்

பிலான்டைரில் (மாலாவி) நடைபெறும் 18-வது காமன் வெல்த் பார்லிமெண்டரி சங்க மாநாட்டில் உகண்டா அதிபர் அமீனின் போக்கை பிரதிநிதிகள் கண்டித்தனர். மெஜாரிடி இனத்தவருக்கு அதிகாரம் கொடுத்தால் என்ன நடக்கும் என்பதற்கு ஆப்பிரிக்காவிலுள்ள மைனாரிடி அரசுகள் உகண்டாவை எடுத்துக் காட்டும் நிலைமை உண்டாகியுள்ளது என்று காமன்வெல்த் பார்லிமெண்டரி சங்கத்தின் தலைவரான சர்பிரடெரிக் பென்னட் கண்டித்தார்.

உகன்டாவின் நாடாளுமன்றத்தை அதிபர் அமீன் ''சஸ்பென்ட'' செய்து வைத்திருப்பதால் அது இம் மாநாட்டில் கலந்து கொள்ளவில்லை.




## இந்தோ-சீன கமிஷன் எதிலும் இந்தியா இருக்காதாம்

புதுடெல்லி, அக். 23—

உத்தேச வியட்நாம் தீர்வில் குறிப்பிடப்பட்டிருக்கும் சர்வதேச மேற்பாவை கமிசன் எதிலும் இந்தியா இடம் பெறாது என்று அரசு வட்டாரச் செய்திகள் கூறுகின்றன.

இதில் இந்தியாவிற்கு ஆசை இல்லை என்றும். வேறு எவர் பிரேரபித்தாலும் இந்தியா ஏற்றுக்கொள்ளாது என்றும் அச்செய்திகள் கூறுகின்றன.

## நடக்க இருப்பவை

தி. மு. க. — அ. தி. மு. க பிரிவினையால்எழுந்துள்ள அடக்குமுறை கண்டனப் பொதுக்கூட்டம்

ஃ ஃ ஃ

மதுரை 15-வது வட்டம்
ஆறுமுச் சந்தியில்
31-10-72 மாலை 7 மணிக்கு

தோழர்கள் :
எஸ். ஏ. தங்கராஜ்
ஐ. மாயாண்டிபாரதி
பேசுவர்.

# இரு தி. மு. க. வில் எந்தப் பிரிவுடனும் சம்பந்தப்படுவதில்லை

## சிண்டிகேட் காங்கிரஸ் முடிவு

புனா, அக். 28—

தி. மு. க. வில் ஏற்பட்டுள்ள பிளவை தொடர்ந்து தமிழக அரசியலில் ஏற்பட்டுள்ள நிலைமை குறித்து, நேற்று மகாராஷ்டிர மாநில புனாவில் கூடிய அகில இந்திய சிண்டிகேட் காங்கிரஸ் காரிய் கமிட்டி ஆலோசனை நடத்தியது.

தி. மு. க. வுடனோ அல்லது அண்ணா தி. மு. க' வுடனோ சம்பந்தப்படாமல் 'பொறுத்திருந்து பார்க்கும்' கொள்கையைத் தமிழ்நாடு சிண்டிகேட் காங்கிரஸ் பின்பற்ற வேண்டும் என்று கமிட்டி முடிவு செய்தது.

## மராட்டிய

# சட்ட மன்றத்திலும் விலைவாசி எதிர்ப்பு இயக்கம்

## எதிர்க்கட்சிகள் அறிவிப்பு

பம்பாய், அக். 28—

மராட்டிய சட்டமன்றத்தில் கடும் விலைவாசி உயர்வை எதிர்த்து ஒன்றுபட்டு கூட்டாக போராடப் போவதாக இங்கு செவ்வாயன்று நடைபெற்ற கூட்டத்தில் எதிர்க்கட்சியினர் அறிவித்தனர்.

விலைவாசியைக் குறைக்கும் முதல் நடவடிக்கையாக மராட்டிய மாநில அரசு, அரசினர் போக்குவரத்து பஸ் கட்டணம், மின் கட்டணம் போன்றவைகளை உடனடியாக குறைக்க வேண்டும் என்று வலியுறுத்தினர்.

வறட்சி நிலையை எதிர்த்துப் போராட அனைத்துக் கட்சியினரும் இணைந்த ஒரு சர்வகட்சிகமிட்டி அமைக்க வேண்டும் என்று எதிர்க் கட்சிகள் வலியுறுத்தினர்.

# எம். ஜி. ஆர். மீது வருமான வரி வழக்கு வாபசானது ஏன்?

## நெடுஞ்செழியன் கேள்வி

மதுரை. அக். 29—

எம். ஜி. ஆர். மீதான வருமான வரி வழக்கு வாபஸ் செய்யப்பட்டதேன் என்று அமைச்சர் திரு நெடுஞ்செழியன் இங்கு இன்று பேசிய பொதுக் கூட்டத்தில் கேள்விகேட்டார்.

எம். ஜி. ஆர். எங்களிடம் கணக்குக் கேட்கிறார் என்றும் ஆனால் அவர் 3 ஆண்டுகளாக சட்டமன்றத்தில் சொத்துக் கணக்கு தாக்கல் செய்யவில்லை என்றும் அமைச்சர் குற்றம் சாட்டினார்.

எம். ஜி. ஆரின் வருமான வரி பாககி ரூ 14 லட்சத்துக்காக அவருடைய வீட்டை ஜப்திசெய்ய அரசு நீதிமன்றததில் வழக்குத் தொடுத்தது என்றும் பின்னர் எம். ஜி. ஆர். ''ஸ்டே'' வாங்கினார் என்றும் இப்போது அவர் ''ஸ்டே'' வாங்கியிருப்பதும் அரசு வழக்கை வாபஸ் வாங்கியிருப்பதும் மர்மமாக உள்ளதென்றும் அமைச்சர் குறிப்பிட்டார்.

எம். ஜி. ஆர். ஒரேயொரு தடவை சட்டமன்றத்தில் தாக்கல் செய்த சொத்துக் கணக்கையும் கூட்டத்தில் வாசித்துக் காட்டினார்.

அந்தக் கணக்கில்சொத்து மதிப்பையும் விவரங்களையும் குறிப்பிடாமல் இருப்பதேன் என்றும் அமைச்சர்கேள்வி கேட்டார்.

மதுரையில் இடம் என்று குறிப்பிட்டிருக்கும் அவர், அந்த இடம் எங்கே இருக்கிறது என்றோ, அது எப்போது என்ன கிரயத்துக்கு வாங்கப்பட்டதுஎன்றோஏன்குறிப்பிடப்பட வில்லை என்று அமைச்சர் கேள்வி கேட்டார் ஏன்?

சத்யா ஸ்டுடியோவில் இடம், லாயிட்ஸ்ரோடில் வீடுஎன்றுமொட்டையாகக் குறிப்பிட்டிருப்பதுடன் அந்தச் சொத்துக்களைத் தன் பேரிலும் தன் அண்ணன் சக்ரபாணி பேரிலும் இருப்பதாக எம். ஜி. ஆர். குறிப்பிட்டிருப்பதை வாசித்துக் கொண்டு எம். ஜி. ஆர். மற்றவர் பெயரில் சொத்து எழுதி வைக்கவில்லையா என்றும் அமைச்சர் கேட்டார்.

# காங்கிரஸ் ஊழியர் வெட்டப்பட்ட வழக்கு

## பரோலில் வந்த கைதி சரண்

மதுரை அக் 30—

சிண்டிகேட் காங்கிரஸ் கட்சி ஊழியர் உலக்கை ராமன் கடந்த வெள்ளியன்று வெட்டப்பட்டது சம்பந்தமான வழக்கில் பவுல் தன் பாண்டி ஆகியவன ஞாயிறன்று போலீசரால் கைது செய்யப்பட்டனர்.

இவ்வழக்கில் மற்றொரு எதிரியான மதுரை மத்திய சிறையிலிருந்து பரோலில் வெளியே வந்திருக்கும் பன்னீர் போலீசில் சரணடைந்திருப்பதாக கூறப்படுகிறது.

மற்றும் சிலர் தேடப்படுவதாகவும் கூறப்படுகிறது.

# குமரி மாவட்டத்தில் அரசுப் போக்குவரத்து தொழிலாளர் வேலை நிறுத்தம்

நாகர்கோவில், அக். 28—

குமரி மாவட்டம் முழுவதுமுள்ள அரசுப் போக்குவரத்துத் தொழிலாளர்கள். 24 மணி நேரம் அடையாள வேலை நிறுத்தம் செய்தனர்.

20 சதவீத போனஸ் கோரிக்கையை முன் வைத்து அக். 27-ந் தேதி நள்ளிரவு 12 மணி முதல் 28-ந்தேதி நள்ளிரவு 12-மணி வரை இந்த வேலை நிறுத்தம் நடந்தது.

தமிழ்நாடுஅரசுப் போக்குவரத்துத் தொழிலாளர் சங்கமும் (சி. ஐ. டி. யூ.) தமிழ் நாடு ஸ்டேட் டிரான்ஸ் போர்ட் தொழிலாளர்சங்கமும் (ஐ. என். டி. யூ. சி.) சேர்ந்து அமைத்துள்ள கூட்டுப் போராட்டககுழு விடுத்த வேண்டுகோளுக்கு ஏற்ப இந்த வேலை நிறுத்தம நடந்தது.

சங்க அரசியல் வேறுபாடின்றி எல்லாத் தொழிலாளர்களும் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டனர். ஒரு அரசு பஸ்சும் ஓடவில்லை.

சென்னையில் தி. மு. க. சங்கம் செய்து கொண்டுள்ள 10 சதவீத போனஸ் உடன்பாட்டை தி. மு. க. சங்கத்தின் குமரி மாவட்டக் கிளை ஏற்றுக் கொள்ளவில்லை. அச்சங்கமும் இந்த வேலை நிறுத்தத்தில் கலந்து கொண்டது.

எங்கு பார்த்தாலும் போனஸ் கோரிக்கை முழக்கங்களும், ஆர்ப்பாட்ட ஊர்வல முழக்கங்களுமே ஒலித்தன.

இந்த வேலை நிறுத்தப் போராட்டத்தினை தோழர்கள் எம். எம். அலி, ஜெ. ஹேமச்சந்திரன், திருவாளர்கள் ஏ. ஜேம்ஸ் எம் எல் ஏ, ஆர். கே. ராம் ஆகியோர் தலைமை தாங்கி நடத்திச் சென்றனர்.

# வியட்னாமுக்கு ஆதரவு

## சூ. என். லாய் உறுதி

பீகிங், அக். 28—

வியட்நாமில் சமாதானத்தை நிலைநாட்ட அமெரிக்காவுடன் நடத்திய பேச்சுவார்த்தையில் வியட்னாம் ஜனநாயகக் குடியரசு, தென் வியட்னாம் புரட்சி அரசும் எடுத்த நியாயமான சரியான நிலையை மக்கள் சீனம் ஆதரிக்கிறது என்று சீனப் பிரதமர் சூ-என்-லாய் அறிவித்தார்.

வியட்னாம் ஜனநாயகக் குடியரசின் தூதுவர் நிகோயின் தியன், மற்றும் தென் வியட்னாம் புரட்சி அரசின் தூதுவர் நிகோயின் வான் டாங் ஆகியோரிடம் மக்கள் சீனத்தின் ஆதரவைத் தெரிவித்தார்.

# வால்பாறையில் ஆர்ப்பாட்டம்

வால்பாறை, அக். 30—

வால்பாறையில் 22-ந் தேதி தோட்டத் தொழிலாளர்கள், மின்சாரத் தொழிலாளர்கள் பொதுப்பணித் துறைத் தொழிலாளர்கள் ஒன்றிணைந்து, நாட்டில் நிலவிவரும் விலைவாசி உயர்வு, வேலையில்லாத் திண்டாட்டம் ஆகியவற்றை எதிர்த்து நூற்றுக்கு மேற்பட்டோர் வால்பாறை தோட்டத் தொழிலாளர் அலுவலகத்திலிருந்து ஊர்வலமாகப் புறப்பட்டு, முக்கிய வீதிகள் வழியரக வந்து, தாலுகா அலுவலகத்தின் முன மாபெரும் ஆர்ப்பாட்டம் நடத்தினர். உணர்ச்சி மிகுந்த கோஷங்களை முழக்கினர். இந்திய மாணவர் சங்க மாணவர்களும் ஊர்வலத்தில் பங்கு கொண்டனர்.

# மார்க்சிஸ்ட் கட்சி...

(1ம் பக்கத் தொடர்ச்சி)

முடிக்கவேண்டியுள்ளது.

மக்களுக்குக் காங்கிரஸ் மீதிருந்த பிரமைகள் தகர்ந்து வருகின்றன. மேலெழுந்த வாரியாக அசைக்க முடியாத கட்சியாகத் தென்பட்ட தி.மு.க. கட்சி இப்போது உடைந்து விட்டது. சரியான கொள்கை அஸ்திவாரமில்லாத அந்தக் கட்சிக்கு இந்தக் கதி ஏற்பட்டது தவிர்க்க முடியாததேயாகும்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஒன்றுதான் மக்கள் நலனுக்காக நிற்கும் கட்சி என்பதை அனுபவ ரீதியாக மக்கள் உணர்ந்து வருகிறார்கள். இன்று நமக்கு பொன்னானவாய்ப்பாக ஏற்பட்டுள்ளது.

நம்முன்னுள்ள மாபெரும் கடமைகளை உறுதியுடன் நிறைவேற்றுவோம்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி(மார்க்சிஸ்ட்)தமிழ் மாநிலக் குழு சார்பில், தீக்கதிர் அச்சகத்தில் (13, முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை1) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா.